# BIBLIOGRAPHICAL DATA

| | | |
|---|---|---|
| Title of the book | : | **ANDRADA VAZHVIL AZHAKU TAMIL** |
| Author | : | **Manavai Mustafa** |
| Copyright holder | : | Author |
| First edition | : | 1993 |
| Re-edition | : | 2000 |
| Paper used | : | 16 kg. White cream wove |
| Size of the book | : | Crown octovo |
| Printing points used | : | 10 points |
| No. of Pages | : | 222 |
| Price | : | Rs. 50/= |
| Printer | : | **Creative Offset**<br>57, Kumarappa St.,<br>Nungambakkam<br>Chennai - 600 034 |
| Typesetting | : | **Shri Surakshaa Computers**<br>D-129, First Main Road,<br>Anna Nagar East,<br>Chennai - 600 102. |
| Publishing place | : | **Meeraa Publication**<br>AE-5/103, Anna Nagar,<br>Chennai - 600 040. |

# முன்னுரை

சில ஆண்டுகளுக்கு முன்பு ரஷ்ய நாட்டுத் தமிழறிஞர் ரூதின் செமியோன் (இவர் தன் பெயரை 'செம்பியன்' என மாற்றிக் கொண்டவர்) அவர்கள் என்னோடு உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது ஒரு பெரும் மனக்குறையை மிகுந்த வருத்தத்துடன் என்னிடம் வெளிப்படுத்தினார்.

"எங்கள் நாட்டில் இருந்தபடியே தமிழ் கற்று, அத்தமிழறிவை மேலும் வளப்படுத்திக் கொள்ள எல்லா வகையிலும் முயன்று வருகிறோம். தமிழில் சொல்லாற்றல் பெறும் பொருட்டு இலக்கியத் தமிழை, எழுத்துத் தமிழை நூல் வழி கற்கும் என் போன்ற வெளிநாட்டவர்கள் பேச்சுத் தமிழையும் முனைப்புடன் கற்க விரும்பி தமிழகம் வருகிறோம். இங்குள்ள பல்வேறு தரப்பினர்களை நேரில் சந்தித்து உரையாடி பேச்சுத் தமிழ் சொல்வளம் பெற முயல்கிறோம். நாங்கள் சந்திப்பவர்களிடம் பிறமொழிச் சொல் கலவா இலக்கியத் தமிழில் பேசினாலும் என்னோடு உரையாடும் தமிழ் நண்பர்களில் பெரும்பாலோர் ஆங்கிலம், வடமொழி கலந்த கலப்புத் தமிழிலேயே உரையாடுகின்றனர். இதனால் எங்களுக்குப் பேச்சுத் தமிழான பழகு தமிழ்ச் சொற்களைக் கேட்டுப் பேசிப் பழக அதிக வாய்ப்பில்லாது போகிறது. இது ஒரு வகையில், நாங்கள் எங்களவில் உருவாக்கி வளர்த்து வரும் தமிழார்வத்துக்கே ஒரு தடையாக அமைந்துவிடுமோ என்ற அச்சமே கூட எங்களுக்கு ஏற்படுகிறது. அது மட்டுமல்ல, தமிழ்க்கதைகளைப் படிக்கும்போது அதில் வரும் கதை மாந்தர்களிடையே நிகழும்

உரையாடல்களைக் கொண்டு 'பேச்சுத் தமிழ்' பயிற்சி பெறலாம் என்று எண்ணிப் படிக்க முனைந்தால் அக்கதை மாந்தர்களின் உரையாடலும் ஆங்கில, வடமொழிக் கலப்பான தமிழிலேயே உரையாடுவதாக அமைகிறது. இன்னும், சில கதாசிரியர்கள் தங்கள் கதைகளில் வரும் பாத்திரங்களை ஆங்கிலத்திலேயே உரையாடும்படி அமைக்கின்றனர். அதனால் அந்த வாய்ப்பும் கூட இல்லாது போகிறது என்று கூறி வருந்தியது என் உள்ளத்தை நெடு நாட்களாக நெருடிக் கொண்டேயிருந்தது.

கணிசமான எண்ணிக்கையில் தமிழர்கள் வாழும் மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளில் பயணம் செய்யும் போதெல்லாம் நான் பெறுகின்ற உணர்வு மேற்கூறிய மனப்போக்கை எதிரொலிப்பதாகவே இருந்தது.

நான் மலேசியா, சிங்கப்பூர் தமிழர் கூட்டங்களில் பங்கேற்கும் போதெல்லாம் அங்குள்ள தமிழார்வலர்கள் தமிழ் நாட்டுத் தமிழர்களைப்பற்றி ஒரு குறையைச் சுட்டிக் காட்டத் தவறுவதேயில்லை.

"தமிழ் நாட்டிற்கு வெளியே மலேசியத் தமிழர்களாக, சிங்கைத் தமிழர்களாக வாழும் நாங்கள் தமிழைத் தமிழாகவே பேசுகிறோம். எழுதுகிறோம். தேவையின்றி மலாய்ச் சொற்களையோ ஆங்கிலச் சொற்களையோ அல்லது வட மொழியையோ கலந்து பேசுவதில்லை. ஆனால், தமிழ் நாட்டுத் தமிழர்கள் தமிழ், சமஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய மூன்றையும் கலந்தே பேசுகின்றனர். நல்ல தமிழில் பேசும் தமிழ்நாட்டுத் தமிழர்களைப் பார்ப்பதும் பேசுவதும் மிகவும் அரிதாக உள்ளது.

"அது மட்டுமல்ல, அண்மைக்காலமாகத் தமிழ் நாட்டிலிருந்து வெளிவரும் நாளிதழ்களும் வார, மாத

இதழ்களும் நூலுருவில் வெளி வரும் படைப்பிலக்கியங் களும் கலப்புத் தமிழைக் கொண்டதாகவேயுள்ளன. சில தருணங்களில் கதை மாந்தர் உரையாடல்களெல்லாமேகூட ஆங்கில மயமாகவே உள்ளது. இதன்மூலம் இந்தியத் தமிழர்கள் குறிப்பாகத் தமிழ்நாட்டுத் தமிழர்கள் தமிழை மறந்து வருகிறார்களா? அல்லது ஆங்கிலம், வடமொழித் துணையின்றித் தமிழால் இயங்க இயலாது என கருதுகிறார்களா?" என வினாத் தொடுப்பதுண்டு. அப்போ தெல்லாம் அவர்களின் தமிழார்வத்தையும் பற்றையும் கண்டு பூரிக்கும் அதே வேளையில் தமிழ்நாட்டுத் தமிழர்களின் நிலை கண்டு என் உள்ளம் கவலையால் கனத்துவிடும். அவர்கள் வினா பல உண்மைகளை உள்ளடக்கியுள்ளதென்பதில் சிறிதும் ஐயமில்லை.

அதிலும் அண்மைக்காலமாக வலுக்கட்டாயமாகத் தங்கள் எழுத்துக்களில் ஆங்கில, வடமொழிச் சொற்களை அளவுக்கதிகமாகக் கலந்து பேசுவதையும் எழுதுவதையும் பெருமையாகக் கருதும் மனநிலை ஓரளவு வளர்ந்து வருவதையும் மறுக்க முடியாது.

தூய தமிழ் போற்றிய தமிழ்த்தென்றல் திரு.வி.க. மறைமலையடிகள் போன்ற தமிழ்ச்சான்றோர்கள் ஊட்டி வளர்த்த தனித்தமிழ் ஆர்வமும் திராவிட இயக்கம் போற்றி வந்த தமிழ்ப்பற்றும் இன்று தேய்பிறையாக ஆகி வருவதை இன்றைய மேடைகளிலும் படைப்பிலக்கியங்களிலும் ஏன் புதுக்கவிதைகளிலும் காண முடிகிறது. 'புஷ்பம்' என்ற சொல்லை 'புட்பம்' எனக் கூறுவதன் மூலம் தங்கள் தமிழார் வத்தை வெளிப்படுத்தும் போலித்தனம் காணப்படுகிறதே யன்றி 'மலர்' எனக்கூறும் உண்மைத் தமிழார்வம் நீர்த்துக் கொண்டு வருகிறது.

தமிழ்மொழி போதிய சொல்வளமில்லாது இடர்ப் படுவது போன்ற உணர்வை உருவாக்கி, அதை நிறைவு செய்யும் வகையில் பிறமொழிச் சொற்களைத் தமிழுக்குக் கொண்டு வந்து சொல்வளமூட்டுவது போன்ற எண்ணத்தை ஏற்படுத்த முனைகின்றனர். இவர்தம் போக்கு "சொர்ணச் சுரங்கம் உன் மனையில் கரந்திருக்க, இன்னொருவர் வீட்டில் இரந்துண்ண போவாயோ? என்னே உன் ஏழமை!" என்று கவிஞரொருவர் வருந்திப் பாடிய பாடல் வரிகள் என் மனக்கண்முன் பளிச்சிடுகின்றன.

"உலக மொழிகளிலேயே மிக அதிகமான வேர்ச் சொற்களைக் கொண்ட "சொல் வளமுள்ள மொழி தமிழ்" என உலகப் பெரும் மொழியியல் அறிஞர் டாக்டர் எமினோ போன்றவர்கள் போற்றிய தமிழ் மொழியிலுள்ள சொல் வளப்பெருக்கை உணராது செயல்படும் இன்றையத் தமிழரின் போக்கு எள்ளி நகையாடுவதற்குரியதாக உள்ளது. ஒரு கால கட்டத்தில் தமிழர்களால் வெறுத்து ஒதுக்கப்பட்ட "மணிப்பிரவாள" போக்கை மீண்டும் நிலைநாட்ட மேற்-கொள்ளப்பட்டிருக்கும் முயற்சியின் மறுவடிவோ இஃது என்றுகூட எண்ணத் தோன்றுகிறது.

'கருத்தை உணர்த்தும் கருவிதானே மொழி. அதில் தூய்மையைக் காட்டிலும் கருத்துணர்த்தும் திறனுக்குத்தானே முதலிடம்' என்று சிலர் கூறலாம்.

'மொழியானது ஒரு இன மக்களின் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றை முழுமையாக வெளிப்படுத்தும் ஆடி போன்றது' என்பதை எப்போதுமே கருத்திற் கொள்ளுதல் அவசியம் 'க்ஷவரம்' போன்ற வடமொழி சொற்களை அதிகமாகக் கையாண்டதன் விளைவாக 'வடமொழி பேசிய மக்கள் தமிழகம் வருவதற்கு முன்னால் 'க்ஷவரம்' செய்து

கொள்ளும் பழக்கமே தமிழர்களுக்கு இல்லை போலும்' என்பன போன்ற அரை வேக்காட்டு ஆய்வுகள் வெளிப்படவும் அதன் மூலம் தமிழரின் நாகரிகத்தை, பண்பாட்டை பாழ்படுத்தும் போக்கும் தலை தூக்க நேர்ந்திருக்காதல்லவா? மழித்தல், சிரைத்தல் போன்ற சொற்கள் சங்க காலந்தொட்டு வழக்கிலிருந்த போதிலும் அவற்றைப் பயன்படுத்தாதன் விளைவைத்தானே இந்நிலைமைகள் சுட்டிக்காட்டுகின்றன

'மணிப்பிரவாள' மனப்போக்குக் கொண்ட சில எழுத்தாள நண்பர்களிடமும் பேச்சாள அன்பர்களிடமும், "நீங்களும் தமிழர்; உங்கள் எழுத்தும் பேச்சும் தமிழ்; அவற்றைப் படிப்பவர்களும் கேட்பவர்களும் தமிழர்கள். பின் ஏன் உங்கள் எழுத்திலும் பேச்சிலும் பெருமளவில் பிறமொழிக் கலப்பு?" எனக் கேட்டால், "நாங்கள் வேண்டும் என்றே பிற மொழிகளைப் பயன்படுத்துவதில்லை. ஆங்கிலம் வாயிலாகக் கல்விகற்ற எங்களது எழுத்திலும் பேச்சிலும் ஆங்கிலம் போன்ற பிறமொழிச் சொற்கள் சரளமாக வந்து விழுகின்றன. அவற்றிற்கான தமிழ் நேர்ச் சொற்கள் தெரியாததால்தான் தூய தமிழைப் பயன்படுத்த இயலாமற் போகிறது" எனச் சமாதானம் கூறுகின்றனர். இவர்கள் கூற்றிலும் உண்மை இல்லாமலில்லை. இத்தகையவர்களைக் கருத்தில் கொண்டே இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது. ஆங்கில, சமஸ்கிருதச் சொற்களைக் கையாள நேரும்போது, அவற்றிற்கான நேர் தமிழ்ச் சொல்லை அறிந்து பயன்படுத்த அத்தகையவர்கட்கு இந்நூல் ஓரளவு துணையாயமையும் என்பதில் ஐயமில்லை.

அவ்வாறு கையாள எளிதாக இருக்கும் பொருட்டு இந்நூலில் பிற மொழிச் சொற்கள் அகர வரிசையில் அமைக்கப்பட்டுள்ளன.

நான் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் படிக்கும் போது பேராசிரியர் தெ.பொ.மீ. அவர்களின் தூண்டுதலின் பேரில் இரண்டு ஆண்டுகள் சமஸ்கிருத மொழி பயின்றது இந்நூல் உருவாக்கத்துக்குப் பெருந்துணையாமைந்தது. மற்றும் மறைமலையடிகளாரும் அவர்தம் திருமகளார் நீலாம்பிகையம்மையாரும் சமஸ்கிருதச் சொற்களுக்குக் கூறிவந்த தமிழ் நேர்ச் சொற்களின் அடிப்படையிலேயே பல தூய தமிழ் நேர்ச்சொற்கள் உருவாக்கப்பட்டுள்ளன.

அத்துடன் கடந்த 34 ஆண்டுகளாக 'யுனெஸ்கோ கூரியர்' பன்னாட்டுத் திங்களிதழுக்காக தூய தமிழ்ச் சொற்களை ஆங்கிலச் சொற்களுக்கு நேர்ச் சொற்களாக உருவாக்கி யிருந்தவைகளின் அடிப்படையிலும் நல்ல தமிழ்ச் சொற்கள் இந்நூலுள் கையாளப்பட்டுள்ளன. சொற்றொகுப்பை உருவாக்கியபோது அது ஐம்பதினாயிரத்துக்கு மேல் நீண்டு விட்டது. அறிவியல் முதல் கவின்கலை ஈராக அவை பல துறை சார்ந்தவைகளாகும். அஃது பெரியதோர் சொற் களஞ்சியத் தொகுதியாயமையத்தக்கதாகும். எனினும் அன்றாட வாழ்வில், நடைமுறையில் பயன்படுத்தத் தக்கனவாக ஐயாயிரம் சொற்களை மட்டும் தேர்ந்தெடுத்து "அன்றாட வாழ்வில் அழகு தமிழ்" என்ற தலைப்பில் நூலுருவில் வெளியிட்டுள்ளேன். நாளடைவில் காலத்தின் தேவைக்கேற்ப இந்நூலை மாற்ற திருத்தங்களுடன் படிப்படியாக விரிவாக்கி வெளியிட எண்ணியுள்ளேன்.

இந்நூலுக்குச் சிறப்பானதொரு அணிந்துரையை வழங்கியிருப்பவர் மாண்பமை நீதியரசர் பு.ரா.கோகுல கிருஷ்ணன் அவர்களாவர். தமிழ்ப் பற்றும் தனித் தமிழ் ஆர்வலருமான அவர்கள் நெடுநாட்களாகவே என் உள்ளுணர்வுகளுக்கு ஓர் உந்து சக்தியாக விளங்கி வருபவர். அவர்களிடம் உரையாடும்போதெல்லாம் தமிழ்வளர்ச்சி

பற்றிய அவரது ஆக்கமான சிந்தனைகள் என்னை வியப்பிலாழ்த்தும். அச்சான நிலையில் இந்நூலை ஒரே மூச்சில் கண்ணுற்று, தன் கருத்துணர்வுகளை எழுத்துருவில் வடித்துத் தந்துள்ளார். அவரது இனிய தமிழ் உள்ளத்திற்கு என் இதய நன்றியைப் புலப்படுத்திக் கொள்வதில் பெருமையும் பெருமிதமும் அடைகிறேன்.

இந்நூலுக்கு 'வாழ்த்துரை' வழங்கியுள்ள அண்ணா பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் டாக்டர் மு. ஆனந்த கிருஷ்ணன் அவர்கள் மிகச் சிறந்த தமிழ் ஆர்வலர்: தமிழ் வளர்ச்சிக்குத் துணை நிற்பதில் பெருமகிழ்வு கொள்பவர். அறிவியல், தொழில்நுட்ப நூல்கள் அனைத்தும் அழகு தமிழில் வெளிவர வேண்டும் எனும் ஆர்வத் துடிப்பினர். இன்று கணினித் தமிழ் இயக்கத்தை ஆற்றலோடு வழி நடத்துபவர். அண்ணா பல்லைக்கழகம் தமிழில் வெளியிடும் அறிவியல் தொழில்நுட்ப நூல் வெளியீட்டு வல்லுநர் குழுவில் ஒருவனாக இடம் பெற்றுள்ள நான், அக்குழுக் கூட்டங்களில் கலந்துகெள்ளும்போது அவர் காட்டும் தமிழார்வமும் செயல் துடிப்பும் சில நேரங்களில் என்னை மலைக்கச் செய்யும். அன்னார் பல்வேறு இடையறா பணிகளுக்கிடையேயும் இந்நூலைப் படித்து வழங்கியுள்ள வாழ்த்துரை இந்நூலுக்கு மற்றொரு அணிகலனாக அமைந்துள்ளதெனலாம். அன்னார் அவர்கட்கு நான் என்றென்னும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

காலத்தின் இன்றியமையாத் தேவையைக் கருத்தில் கொண்டு உருவாகியுள்ள இம்மறுபதிப்பையும் எனது மற்றைய நூல்களைப் போன்றே தமிழுலகம் ஏற்று ஆதரிக்கும் என்ற நம்பிக்கை எனக்கு எப்போதும் உண்டு.

அன்பன்

**மணவை முஸ்தபா**

# அணிந்துரை

"அன்றாட வாழ்வில் அழகு" தமிழ் என்ற தனித் தமிழ்ச் சொல் தொகுப்பு நூலில் இடம் பெற்ற ஆங்கில, வட மொழி நேர்ச் சொற்கள் பலவற்றை இந்நூலில் படித்து மகிழ்ந்தேன். வடமொழிக் கலப்பும், மணிப்பிரவாள நடைமுறையும், ஆங்கிலச் சொற்களும், பிறமொழிச் சொற்களும் இளமைகுன்றா நம் தமிழ் மொழியில் கலந்து எவ்வளவு இன்னல் விளைவித்துள்ளன என்பதை இந்நூலில் அமைந்துள்ள பிற மொழிச் சொற்களும் அதற்கு நிகரான தனித் தமிழ் சொற்களும் நமக்கு எடுத்து விளக்குகின்றன. கலை மாமணி மணவை முஸ்தபா தமிழ் அறிஞர் மட்டுமல்ல, தமிழ் உணர்வும் கொண்ட மிக சிறந்த தமிழர். அவரது வடமொழிப் புலமை நம் தமிழ் மொழியை வளர்க்கப் பயன்பட்டுள்ளதை இந்நூல் வாயிலாக அறிகிறோம். வேற்று மொழிப்பற்றுள்ள சிலர் தமிழ் மொழி அறிவு பெறுவது தமிழை வளர்க்க அல்ல; அவரவர்கள் பற்றுக் கொண்ட மொழி அளவிற்குத் தமிழ்மொழி வளர்ந்துள்ளதா என்பதை ஒப்பிட்டு, நம் மொழி யின் தனித் தன்மைக்கும், தரணி போற்றும் தனிப்பெரும் உயர்விற்கும் ஏதேனும் ஒரு வகையில் குறை காண்பதற்-கேயன்றி வேறல்ல. நம்முடைய கவனக் குறைவால், தூய தமிழை போற்றத் தவறிய நிலையால், தொடுமணற்கேணி ஊற்று போல் எதற்கும் அழகு தமிழ்ச் சொல் உள என்பதை உணராமையால் எத்தனை பிற மொழிச் சொற்கள் புற்று நோய் போல் நம் தமிழைப் பற்றிக் கொண்டுள்ள என்பதை, இந்நூல் தெள்ளத் தெளிய எடுத்து விளக்குகின்றது. வழிவழியாக மரபு

வழித் தனித்தமிழ்ப் புலவர்கள் தோன்றி நம் தமிழின் தொன்மையைப் பாதுகாத்துள்ளனர். அவர்கள் முயற்சிகள் தோல்வியுறும் நேரத்தில்தான், தமிழகத்தில் தமிழர் விழிப்புணர்ச்சி இயக்கமாக, திராவிட இயக்கமாக உருவெடுத்து மறுமலர்ச்சியை ஊட்டியது.

பிறமொழி ஆதிக்கம் எந்த அளவிற்கு நம் தமிழின் தூய்மையைக் குலைத்துள்ளது என்பதை இந்நூலை நுணுகிப் படிப்போருக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல தெள்ளத் தெளிய விளங்கும். படையெடுப்பால் தமிழர் பண்பாட்டைக் குலைத்ததை விட, மதத்தால், மடமை எண்ணங்களை பக்தியெனும் போர்வையில் புகுத்தியதால், வடபுலத்தார் தங்கள் மொழிக்குத் தெய்வ முலாம் பூசி, மூவரும் தேவரும் போற்றிப் புகழ்ந்த தமிழ் மொழிக்கு இழிவு கற்பித்ததால் ஏற்பட்ட தமிழ் மொழிச் சிதைவு ஏராளம் என்பதை காலத்தால் அழிவுபட்ட அழகு தமிழ்ச் சொற்கள் பறைசாற்றுகின்றன. நம்மில் பலருக்குத் தெரிந்தும் மறைத்து வைக்கப்பட்டுள்ள தூய தமிழ்ச் சொற்கள் திரு. மணவை முஸ்தபாவின் முயற்சியால் இந்நூலில் முத்துக் கோர்வை போல் எடுத்து வைக்கப்பட்டுள்ளன.

“பொறுத்தது போதும் புறப்படு தமிழா” என்ற தமிழ்ச் சொற்கள் குறைந்து ‘சகித்தது போதும் சமர் செய் மகனே’ என்றல்லவா மாறியுள்ளது. வணக்கத்திற்கு வந்தனமும், வணங்குதலுக்கு நமஸ்காரமும், நட்பிற்குச் சிநேகமும், முழுமைக்கு சம்பூர்ணமும், குடியிருப்பிற்குக் காலனியும், நாட்காட்டிக்கு காலண்டரும், திடலுக்கு கிரௌண்டும், காலை மாலை வணக்கத்திற்கு சந்தியா வந்தனமும், இப்படி எத்தனையோ வடமொழி, ஆங்கிலச் சொற்கள் நம் அழகு தமிழில் புகுந்து குலைத்திருப்பதை இத்தூய தமிழ் உணர்வு கொண்ட நூல் தமிழர்களை தட்டி எழுப்புகிறது. இந்நூலை

ஆர்வமுள்ள ஒவ்வொரு தமிழ் மகனும் படிக்க வேண்டும். படித்து அழகு தமிழ்ச் சொற்களை நடைமுறைக்குக் கொண்டுவர வேண்டும். நையாண்டி செய்பவர்கள் குரல் உரத்த தமிழ்க் குரலால் அடக்கப்பட வேண்டும். நம் இடையே ஊடுருவி, நம் இன, மொழிக்கு ஊறுதேடும் உலுத்தர்கள் இம்மொழிக்கு உயிர் உண்டு, உணர்வுண்டு, அழகுண்டு, ஆற்றலுண்டு என்பதினை நாம் அழகு தமிழை கையாளும் முறையிலிருந்து தெளிவு பெற வேண்டும்.

இந்நூலின் தலைப்பு என்னை மிகவும் கவர்ந்தது. தமிழை அன்றாட வாழ்வில் பயன்படாமல் அடக்கிய வேற்று மொழிப் பற்றுடையோர்க்குக் கொடுக்கப்பட்ட சவாலாக 'அன்றாட வாழ்வில் அழகு தமிழ்' நூல் அமைந்துள்ளது. "எந்தமிழில் இசைப்பாடல் இல்லையென செப்புகின்றீர் மானமின்றி" என்ற பாரதிதாசனின் பாடலுக்கு உரம் ஊட்டும் நூலிது. "தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்" எனும் பாரதியின் பாடலுக்கு வளம் சேர்க்கும் நூல் இது. நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பிய ஞானசம்பந்தர் சொல்லையும் தேனினும் இனிய தமிழ் பாடிய மாணிக்க வாசகர் மொழியினையும் இவ்வையகம் உணர எடுத்து வைக்கப் பட்ட அழகு தமிழ் பெட்டகம் திரு. மணவை முஸ்தபாவின் "அன்றாட வாழ்வில் அழகு தமிழ்" நூல் . சிறப்பான தமிழ்மொழி தழைக்க, சிந்தையினை சிலிர்க்க வைக்கும் வண்ணம், இதில் காணும் அழகு தமிழ்ச் சொற்கள் அன்றாட வாழ்வில் பயனுக்கு வருவதாக! பன்னிரண்டு உயிரையும், பதினெட்டு மெய்யையும், வந்தடைந்த ஐந்து வட மொழி எழுத்துக்களையும் முறைப்படுத்தி அன்றாட வாழ்வில் இவ்வெழுத்துக்களின் வேற்று மொழி உச்சரிப்பை அழகு தமிழில் கண்ட திரு மணவை முஸ்தபாவின் முயற்சியை நான் மிகவும் பாராட்டுகிறேன். படிப்போர்கள் இதுவே முழுமை

என கருதிவிடாமல் இந்நூல் உங்கள் ஊக்கத்திற்கு ஒரு தூண்டுகோல் எனக் கொண்டு மேலும் மேலும் அழகு தமிழை அன்றாட வாழ்வில் பயன்படுத்தி மொழி காத்து நம் பண்பைப் போற்றுவோமாக.

நீதியரசர் பு.ரா. கோகுல கிருஷ்ணன்

# வாழ்த்துரை

அறிவியல் செய்திகளைத் தமிழில் தரவேண்டுவது இன்றியமையாத் தேவையாய் அமைந்து விட்டது. அந்த நோக்கில் பல்வேறு அறிஞர்கள் தமது பணியைத் தொடர்ந்து ஆற்றி வருகிறார்கள். அவர்களுள் கலைமாமணி மணவை முஸ்தபா அவர்களும் தமது முனைப்பான முயற்சியில் தொய்வுறாது பணி செய்து வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

தமிழ் வளர்ச்சிக்குத் தக்காங்கு கடனாற்ற வேண்டும் என்னும் நோக்கில் தென் மொழிகள் புத்தக நிறுவனத்தின் தமிழ் நூற்பதிப்புப் பணியைத் தேர்ந்தெடுத்து, பல்வேறு நூல்களைப் பதிப்பித்த பெருமை இவருக்குண்டு. அறிவியல் கலைச் சொற் களஞ்சியத்தை வெளியிட்டு மகிழ்ந்த இவர், தமிழ் மக்கள் தம் அன்றாட வாழ்வில் பயன்படுத்தும் பிற மொழிச் சொற்களைத் தொகுத்து, அவற்றிற்குரிய தமிழ்ச் சொற்களை வழங்கியுள்ளார்.

காலத்தின் போக்குக்கும் தேவைக்கும் ஏற்றவாறு தனது தமிழ்ப் பணியை வரையறுத்து அமைத்துக் கொண்ட பெருந்தகை மணவை முஸ்தபா அவர்கள், 'அன்றாட வாழ்வில் அழகு தமிழ்' என்னும் அழகிய நூலை அச்சாக்கி இருப்பது கண்டு பெரிதும் மகிழ்ச்சியடைகிறேன். அவரது தமிழ்ப் பணிக்கு எனது பாராட்டு.

இம்முயற்சி பாராட்டுக்குரியதாகும். தமிழோடு ஒன்றி இணைந்துவிட்ட பல அயற்சொற்களுக்கும், வழக்கொழிந்த சில சொற்களுக்கும் நிகரான தமிழ்ச் சொற்களைத் தந்துள்ளார்.

பல சொற்களுக்கு அழகிய தமிழ்ச் சொற்க ளைப் பொருள் விளக்கமாய் தந்திருப்பது போற்றத்தக்கதாகும். சான்றாக அடல்ட் - கட்டிளமை, அனுபவம் - பட்டறிவு, ஆபத்து - ஏதம், இங்க்பேடு - மைப்பட்டை, பைலட் - வலவன், காபி - குளம்பி போன்றவற்றைக் குறிப்பிடலாம்.

அறிவியல் தமிழ் வளர்ச்சிக்கு அறிஞர் பெருந்தகை மணவை முஸ்தபா ஆற்றி வரும் பணிகள் போற்றுதலுக்கும் பாராட்டுக்குமுரியதாகும். காலச்சுவடுகளாகப் பதிந்து வரும் இவரின் தமிழ்ப் பணியைப் பாராட்டி மகிழ்கிறேன்.

"மணவை முஸ்தபா ஒரு மறுமலர்ச்சித் தமிழறிஞர். தமிழ்த் தொண்டே தலையாய பணியாகக் கொண்டவர்; பன்மொழிப் புலமையர்; கலைச் சொல்லாக்கச் சிந்தனை யாளர்; அறிவியல் பேரார்வலர்; அருமையான மொழி பெயர்ப்பாளர்; கருமமே கண்ணாயினார்; எளிமையே உருவான, இனிமையே வடிவான தமிழ்க் கருமயோகி; செயற்படு சிந்தையர்; சுற்றிச் சுழலும் தமிழ்த் தும்பி; தொண்டே துடிப்பாகக் கொண்ட தூயர். உழைப்பே உயிராக உடையவர்." என்னும் தமிழிலக்கிய வரலாற்றுக் களஞ்சியத்தின் வாழ்த்துக்களை வழிமொழிந்து அவரது அனைத்து முயற்சிகளும் வெற்றியடைய வாழ்த்துகிறேன்.

**மு. ஆனந்தகிருஷ்ணன்**
துணைவேந்தர்
அண்ணா பல்கலைக்கழகம்

# காணிக்கை

மொழித்தூய்மை போற்றுவதன் வாயிலாக
மொழி, இனத் தனித்தன்மை காக்க
முனைப்புக் காட்டிய தனித்தமிழ் பற்றாளர்கட்கு
இந்நூலைக் காணிக்கையாக்குகிறேன்.

**ஆசிரியன்**

## அ

| | |
|---|---|
| அக்காடெமி | கல்விக் கழகம், கலைக் கழகம், மன்றம், அவை |
| அக்காமோடேஷன் | வீட்டு வசதி, குடியிருப்பு, இடவசதி |
| அக்கி | வேனல் கட்டி |
| அக்கியூஸ் | குற்றப்படுத்து |
| அக்கியூஸ்ட் | குற்றம் சாட்டப்பட்டவர் ஒப்புக் கொள், ஏற்றுக் கொள் |
| அக்செப்டன்ஸ் | ஏற்பு |
| அக்யுரேட் | துல்லியமான, திட்ப நுட்பமான |
| அக்ரமம் | முறைகேடு, கொடுமை, ஒழுங்கின்மை |
| அக்கௌன்டென்ட் | கணக்கர் |
| அக்ராசனம் | அவைத் தலைமை |
| அக்ராசனர் | தலைவர் |

| | |
|---|---|
| அக்ரிமெண்ட் | உடன்படிக்கை |
| அக்னாலெட்ஜ்மெண்ட் | ஏற்றுக்கோடல், ஒப்புக் கொள்ளல், ஒப்பளித்தல் |
| அக்னி | அனல், அழல், தீ, நெருப்பு |
| அக்குரசி | துல்லியம் |
| அக்ஸசரி | துணை, கூடுதல் |
| அக்ஸப்ட் | ஒப்புக்கொள், ஏற்றுக் கொள் |
| அகங்காரம் | செறுக்கு, ஆணவம் |
| அகடமிக் | கல்வித் தொடர்பான |
| அகதி | ஏதிலி |
| அகந்தை | இறுமாப்பு, செறுக்கு, தற்பெருமை |
| அகம்பாவம் | அகந்தை, இறுமாப்பு |
| அகராதி | அகர முதலி, அகர வரிசை |
| அகஸ்மாத்து | தற்செயல், எதிர்பாரா நிலை |
| அகாலம் | தகாக் காலம், காலமிலாக் காலம் |
| அகாமடேஷன் | இட வசதி |
| அகிலம் | உலகம், வையகம் |
| அகௌரவம் | மரியாதையிலா, மதிப்பற்ற |
| அங்கம் | உறுப்பு, பகுதி |
| அங்கத்தினர் | உறுப்பினர் |

| | |
|---|---|
| அங்க சேஷ்டை | உறுப்புக் குறும்பு |
| அங்கீகாரம் | ஏற்பு |
| அங்குலம் | விரற்கிடை, |
| அங்குரார்ப்பணம் | தொடக்கம் |
| அங்கஹீனம் | உறுப்புக் குறை |
| அச்சீவ் | முயன்று பெறு |
| அச்சீவ்மென்ட் | இலக்கடைதல் |
| அசகாய சூரன் | துணைதேடா மாவீரன் |
| அசம்பாவிதம் | முரணிகழ்வு |
| அசட்டை | கவனமின்மை |
| அசத்தியம் | வாய்மையின்மை, சமாய் |
| அசரீரி | விண்ணொலி |
| அசிடிட்டி | அமிலப் பண்பு |
| அசாத்தியம் | இயலாதது, இயலாமை முடியாதது |
| அசாதாரணம் | வழக்கத்திற்கு மாறான, மிகப் பெரிய, கடுமையான |
| அசிங்கம் | அறுவறுப்பு |
| அசுத்தம் | தூய்மையின்மை |
| அசூசை | அழுக்காறு |
| அசெட்ஸ் | உடமை, (உடைமை) |
| அசெம்பிளி | சட்டமன்றப் பேரவை கூட்டம் |

| | |
|---|---|
| அசெசர் | வரி விதிப்புக்குரியவர் |
| அசௌக்கியம் | உடல் நலமின்மை |
| அசௌகர்யம் | சமயமின்மை |
| அஞ்சலி | இறுதி வணக்கம் |
| அஞ்சனம் | கண் மை |
| அஞ்ஞானம் | அறியாமை, அறிவின்மை |
| அஞ்ஞானி | அறிவிலி |
| அட்டாக் | தாக்கு |
| அட்டெண்டெண்ஸ் | வருகை |
| அட்டெண்டெண்ஸ் ரிஜிஸ்டர் | வருகைப் பதிவேடு |
| அட்சதை | மங்கல அரிசி |
| அட்சரம் | எழுத்து |
| அட்சராப்பியாசம் | எழுத்து கற்பிக்கும் நிகழ்வு |
| அட்டெஸ்ட் | சான்றொப்பம் |
| அட்மாஸ்ஃபியர் | வளி மண்டலம், காற்று மண்டலம் |
| அட்மினிஸ்ட்ரேஷன் | ஆட்சி, ஆளுகை, நிர்வாகம் |
| அட்மிஷன் | சேர்க்கை |
| அட்மிஷன் நெம்பர் | சேர்க்கை எண் |
| அட்மைரல் | கப்பற் படைத் தலைவர் |

| | |
|---|---|
| அட்வகேட் | வழக்கறிஞர், வழக்குரைஞர் |
| அட்வகேட் ஜெனரல் | அரசுத் தலைமை வழக்கறிஞர் |
| அட்வைசர் | அறிவுரையாளர் |
| அட்வான்ஸ் | முன் பணம், முன்னேற்றம் |
| அட்வான்டேஜ் | நன்மை, மேன்மை |
| அட்வென்ச்சர் | துணிவுச் செயல் |
| அட்ஹாக் | தனி நிமித்தம், குறிப்பிட்டதற்கென, குறிப்பிட்ட ஒன்றுக்கான |
| அட்ஜார்ன் | ஒத்தி வை |
| அட்ஜஸ்ட் | சரிப்படுத்து |
| அட்ஹாக் ரூல்ஸ் | தற்காலிக விதிகள் |
| அட்ஜஸ்ட் | சரிக்கட்டு |
| அடமென்ட் | பிடிவாதம் |
| அடாப்ட் | தழுவு, பொருத்தமாக்கு |
| அடாப்டர் | ஏற்பி, இயைபி, பொருத்தி |
| அடல்ட் | வயது வந்த, கட்டிளமை |
| அடல்ட்ரேஷன் | கலப்படம் |
| அடாப்ஷன் | மகவேற்பு, ஏற்பிசைவு |
| அடிக்ட் | பழக்க அடிமை, தீய பழக்கத்திற்கு அடிமை |
| அடிஷனல் | சேர்ப்பு, கூடுதல் |

| | |
|---|---|
| அண்டப் புளுகன் | பெரும் பொய்யன் |
| அண்டர்டேக் | மேற்கொள் |
| அண்டகோளம் | உலக உருண்டை |
| அத்தர் | நறுமணப் பொருள் |
| அத்தாட்சி | சான்று |
| அத்தாரிட்டி | அதிகாரி, ஆணைக்குழு |
| அத்தியாயம் | நூற் பிரிவு |
| அத்தியாவசியம் | இன்றியமையாமை |
| அத்துவானம் | வீண், பாழ் |
| அத்வைதம் | இரண்டற்ற |
| அதம் | அழிப்பு |
| அதமம் | கீழ்மை |
| அதர்மம் | அறமற்ற |
| அதரம் | இதழ். உதடு |
| அதிக்கிரமம் | மீறல், வரம்புகடந்த |
| அதிகம் | மிகுதி |
| அதியற்புதம் | பெருவியப்பு |
| அதிகாரி | ஆட்சி ஆணையர் |
| அதிகாரம் | முறையாண்மை |
| அதிகாலை | விடியற்காலம், வைகறை |

| | |
|---|---|
| அதிசயம் | வியப்பு, விந்தை |
| அதிசீக்கிரம் | மிக விரைவில் |
| அதிபர் | தலைவர் |
| அதிகப் பிரசங்கம் | அடங்காப் பேச்சு |
| அதிகாரம் | முறையாண்மை, ஆட்சி ஆணை, ஆட்சியுரிமை, ஆளுமை |
| அதிகாரி | அலுவலர், முறையாளி |
| அதி மதுர | மிக இனிமையான |
| அதிதி | விருந்தினர் |
| அதி நுட்ப | மிக நுண்ணிய |
| அதிர்ஷ்டம் | நல்வாய்ப்பு, நற்பேறு |
| அதிருப்தி | மன நிறைவின்மை |
| அதீதம் | கடந்தது |
| அதோகதி | மிகை |
| அந்தகன் | விழியிழந்தோன் |
| அந்தரங்கம் | மறைவான, தனிமையான |
| அந்தராத்மா | பரமான்மா, மனம் |
| அந்தகாரம் | இருள் |
| அந்தி | கீழ்நிலை |
| அந்திம காலம் | இறப்பு வேளை |

| | |
|---|---|
| அந்தியம் | மாலைக்காலம், மாலைப் பொழுது |
| அந்நியர் | அயல், அயலர் |
| அந்திரம் | மறைபொருள், தனிமை, மறைவிடக்கம் |
| அந்தி | மாலை |
| அந்தியக் கிரியை | ஈமவினை, இறுதிக் கடன் |
| அநந்தம் | முடிவற்றது, அளவற்றது |
| அநந்த்தம் | அழிவு, கேடு |
| அந்திமக் காலம் | முடிவு காலம் |
| அநாதை | யாருமற்ற, துணையிலா |
| அநித்தியம் | நிலையிலா |
| அநியாயம் | முறையின்மை, முறைகேடு |
| அனுகூலம் | சார்பு |
| அநீதி | நேர்மையின்மை |
| அப்சர்வர் | பார்வையாளர் |
| அப்சார்ப் | ஈர்த்துக் கொள், உட்கொள் |
| அப்சல்யூட் | முழுமையான, வரம்பிலா |
| அப்டோமன் | வயிறு |
| அப்நார்மல் | இயல்பு மாறிய |
| அப்பர் | மேல் நிலை |

| | |
|---|---|
| அப்பியாசம் | பயிற்சி, பழக்கம் |
| அப்பாயின்மென்ட் ஆர்டர் | அமர்த்தாணை |
| அப்பாவி | விவரமறியாதவன், பேதை வெகுளி |
| அப்பீல் | மேல் முறையீடு |
| அப்லிஃப்ட் | மேம்பாடு |
| அப்பிராணி | ஆற்றலற்றவன், பேதை |
| அப்ராட் | வெளி நாட்டிற்கு |
| அப்ரூவல் | ஏற்பு, ஒப்பு, ஒப்புதலளிப்பு |
| அப்ரோச் | அணுகுதல், அணுகுமுறை |
| அப்ளிகேஷன் | விண்ணப்பம் பயன்படுத்துதல் |
| அப்ஸ்ட்ராக்ட் | பிழிவு, சுருக்கம், எடுகுறிப்பு, பொழிப்பு |
| அப்ரைஸர் | மதிப்பீட்டாளர் |
| அப்ஸ்கான்ட் | தலைமறைவு |
| அப்ஸார்ப் | உட்கொள், உறிஞ்சு |
| அப்ஸல்யூட் | வரம்பிலா |
| அபகாரம் | தீங்கு, பொல்லாப்பு |
| அபகரித்தல் | கவர்தல், பறித்தல் |
| அபகீர்த்தி | சிறுமை, பழிப்பு |

| | |
|---|---|
| அபத்தம் | உளறல், பொருந்தாச் செயல், பொய்மை |
| அஃபைக்ட் | தாக்கம், செயல் விளைவு |
| அபராதம் | பணத் தண்டம், தண்டம் |
| அபரிமிதம் | அளவற்ற |
| அபயம் | அடைக்கலம், தஞ்சம், கையடை |
| அபாண்டம் | வீண்பழி |
| அபாயம் | தீங்கு, பேரிடர் |
| அபார்ஷன் | கருக்கலைப்பு, கருச்சிதைவு |
| அபாரம் | அளவற்ற |
| அபாலஜி | மன்னிப்பு |
| அபாலிஷன் | நீக்கல் |
| அபிநயம் | மெய்ப்பாடு, நடனம் |
| அபிப்பிராயம் | கருத்து, வண்ணம், நோக்கம் |
| அபிமானம் | பற்று |
| அபிமானி | பற்றாளர் |
| அபிவிருத்தி | வளர்ச்சி, மேம்பாடு, விரிவாக்கம் |
| அபிலாஷை | விருப்பம், அவா, வேட்கை |
| அபிஷேகம் | முழுக்காட்டுதல், முழுக்காடு, முழுக்கு |

| | |
|---|---|
| அபூர்வம் | அரிய, அருமை |
| அபேட்சகர் | வேட்பாளர் |
| அபேட்சை | வேட்பு |
| அபிமானம் | நேயம் |
| அபேட்சா பத்திரம் | வேட்பு மனு |
| அம்பலம் | வெளிப்படை, அவை |
| அம்பாரம் | குவியல், களஞ்சியம் |
| அம்னீஷியா | மறதி நோய் |
| அமங்கலி | கைம்பெண் |
| அமர்க்களம் | போர்க்களம் |
| அமரத்துவம் | அழிவின்மை |
| அமரர் | விண்ணவர் |
| அமாவாசை | மதி மறைநாள் |
| அமானத்து | ஒப்படைத்த பொருள் |
| அமிர்தம் | அருமருந்து, அமிழ்தம், இனிமை, அமுதம் |
| அமிலம் | புளிப்பு நீர் |
| அமுல் | நடைமுறை |
| அமெச்சூர் | தொழில் சாரா கலைஞர் |
| அமெண்மென்ட் | திருத்தம் |

| | |
|---|---|
| அமோகம் | மிகுதியாக |
| அமௌன்ட் | தொகை, அளவு |
| அயோக்கியன் | தகவிலான் |
| அர்ச்சனை | மலர்தூவி வழிபாடு, பூசனை |
| அர்த்தராத்திரி | நடு நிசி, நள்ளிரவு |
| அர்த்த பேதம் | பொருள் வேறுபாடு |
| அர்பன் | நகரக |
| அரசாங்கம் | அரசு |
| அரவம் | ஒலி, ஓசை, பாம்பு |
| அரித்மேட்டிக் | எண் கணிதம் |
| அருணோதயம் | வைகறை |
| அரெஸ்ட் | கைது, தடுத்தல் |
| அரேஞ்ச் | ஏற்பாடு செய், அடுக்கி வைத்தல் |
| அரைவல் | வருகை |
| அலவன்ஸ் | இசைவுத் தொகை |
| அல்சர் | குடற்புண் |
| அல்லோலகல்லோலம் | ஆரவாரம் |
| அல்லோகேஷன் | ஒதுக்கீடு |
| அல்ஜீப்ரா | இயற்கணிதம் |
| அலக்கலக்காய் | தனித்தனியாய் |

| | |
|---|---|
| அலங்கம் | கொத்தளம் |
| அலங்காரம் | ஒப்பனை, புனைவு |
| அலங்கமலங்க | பொறி கலங்க |
| அலட்சியம் | புறக்கணிப்பு, நோக்கின்மை |
| அலர்ஜி | ஒவ்வாமை |
| அலவன்ஸ் | செலவுப்படி, படி, இசைவுத் தொகை |
| அலாட்மென்ட் | ஒதுக்கீடு |
| அலாரம் | எச்சரிக்கையொலி |
| அலர்ட் | விழிப்பான, எச்சரிக்கையான |
| அவகடம் | வஞ்சகம் |
| அவகாசம் | சமயம் |
| அவமானம் | மானக்கேடு |
| அவசியம் | தேவை |
| அவஸ்தை | தொல்லை |
| அவரோகணம் | இறக்கல் |
| அவலட்சணம் | அழகின்மை |
| அவகாசம் | ஓழிவு, ஓய்வு |
| அவகேடு | பெருந்தீங்கு |
| அவச் சொல் | இழி சொல் |
| அவசரம் | விரைவு |

| | |
|---|---|
| அவச் சாவு | இழிவிறப்பு |
| அவசானம் | முடிவு, இறுதி |
| அவதானம் | நுண்ணோக்கு |
| அவசியம் | கட்டாயம், இன்றியமையாமை |
| அவத்தம் | கேடு |
| அவஸ்தை | துன்பம் |
| அவதி | துன்பம் |
| அவம் | வீண்கேடு |
| அவமானம் | இழிவு |
| அவயவம் | உறுப்பு |
| அவலம் | துன்பம் |
| அவுட்புட் (கணினி) | வெளியீடு |
| அவுலியா | இறைநேசச் செல்வர் |
| அவிசாரி | பரத்தை |
| அற்பம் | சிறுமை |
| அவென்யூ | நிழற்சாலை |
| அவேர்னஸ் | விழிப்பு நிலை |
| அவாய்டு | விலக்கு, தவிர் |
| அவரோகணம் | இறங்குகை |
| அற்புதம் | விந்தை, அருமை, புதுமை |

| | |
|---|---|
| அற்பத்தனம் | சிறுமை |
| அற்பு சுகம் | சிற்றின்பம் |
| அன்னதானம் | உணவளித்தல் |
| அனலைசிஸ் | பகுப்பாய்வு |
| அனலைஸ்ட் | பகுப்பாய்வாளர் |
| அனஸ்தீஸியா | உணர்வகற்றல் |
| அனாமத்து | தனித்த |
| அனாவசியம் | தேவையற்ற |
| அனாட்டமி | உட்கூறியல் |
| அன்னியன் | அயலான் |
| அன்னியோன்னியம் | நெருக்கம் |
| அன்னதானம் | சோற்றறம் |
| அன்னபோஸ்ட் | எதிரிலி |
| அனலைசிங் | பகுப்பு, கூறுபாடு, இணக்கம் |
| அனிமல் | விலங்கு |
| அனீமியா | குருதிச் சோகை |
| அனுதாபம் | இரக்கம் |
| அனுமதி | ஒப்புதல், இசைவு |
| அனுதினம் | நாடோறும் |
| அனுபந்தம் | பிற்சேர்க்கை |

| | |
|---|---|
| அனுபவம் | பயிற்சி, பழக்கம், பட்டறிவு |
| அனுபோகம் | நுகர்ச்சி |
| அன்னபோஸ்ட் | எதிரிலி; போட்டியின்றி |
| அனுமானம் | கருதுதல் |
| அனுக்கிரகம் | அருள் |
| அனுகூலம் | நன்மை |
| அனுசரணை | உறுதுணை |
| அனுசரித்தல் | கடைப்பிடித்தல், பின்பற்றல் |
| அனுதாபம் | பரிவு, இரங்கல், இரக்கம் |
| அனுதாபி | ஆதரவாளர் |
| அனுக்கிரகம் | அருளுடைமை |
| அனுதினம் | நாள்தோறும் |
| அனுமதி | இசைவு |
| அனுமானம் | உய்த்துணர்தல், கருதுதல் |
| அனாச்சாரம் | துப்புரவின்மை |
| அனாயாசம் | அயற்சியிலாது |
| அநேகம் | பல |
| அனுஷ்டானம் | சமய ஒழுக்கம் |
| அனுஷ்டித்தல் | கைக்கொள்ளல் |
| அஜீரணம் | செறியாமை |

| | |
|---|---|
| அஸால்ட் | வலிந்து தாக்குதல் |
| அஷ்ட திக்கு | எண் திசை |
| அஸ்தம் | கை |
| அஸ்தமனம் | மறைவு, இறப்பு |
| அஸ்தி | எரியுடல் சாம்பல், எலும்பு |
| அஸ்திரம் | அம்பு, கணை |
| அஸ்ட்ராலஜி | கணியியல் |
| அஸ்ட்ரானமி | வானியல் |
| அஸ்திவாரம் | அடிக் கட்டடம், அடித்தளம் |
| அஸால்ட் | வலிந்து தாக்குதல் |
| அஹிம்சை | வருத்தாமை |

## ஆ

| | |
|---|---|
| ஆக்கினை | கட்டளை |
| ஆக்சிடென்ட் | நேர்கை, தற்செயல், எதிர்பாரா நிகழ்வு |
| ஆக்ட் | செயல்வினை, நடிப்பு, சட்டம் |

| | |
|---|---|
| ஆக்டிவ் | சுறுசுறுப்பு |
| ஆக்டிவிட்டி | நடவடிக்கை |
| ஆக்ஞை | ஆணை |
| ஆக்கிரமிப்பு | கைப்பற்றல், வன் கவர்வு |
| ஆக்ஸில். | அச்சு |
| ஆக்ச்சுவல் | உள்ளபடி |
| ஆக்டிவ் | சுறுசுறுப்பான |
| ஆக்ஷன் | செயல், நடிப்பு |
| ஆகர்ஷண சக்தி | ஈர்ப்பாற்றல் |
| ஆகாஷ்வாணி | வானொலி |
| ஆகமம் | அறிவு நூல் |
| ஆகாசம் | வான் |
| ஆகாயம் | விண் |
| ஆகாய விமானம் | வானவூர்தி |
| ஆகாரம் | உணவு |
| ஆக்கிரமித்தல் | வலிய கவர்தல் |
| ஆங்காரம் | இறுமாப்பு |
| ஆங்ஸைட்டி | ஆவல், கவலை |
| ஆச்சரியம் | வியப்பு |
| ஆச்சாரம் | வழக்கம், ஒழுக்கம், நன்னடை |
| ஆச்சாரியன் | ஆசிரியன் |

| | |
|---|---|
| ஆசனம் | இருக்கை |
| ஆசாபாசம் | உலகப் பற்று |
| ஆசி | வாழ்த்து |
| ஆசிட் | அமிலம் |
| ஆசீர்வதித்தல் | வாழ்த்துதல் |
| ஆசீர்வாதம் | வாழ்த்துரை |
| ஆசுவாசம் | இளைப்பாறுதல் |
| ஆசை | அவா, வேட்கை |
| ஆசை வார்த்தை | விருப்புரை |
| ஆட்டிட்யூட் | மனப்பான்மை |
| ஆட்சேபம் | எதிர்மொழி, மறுத்துரைத்தல், மறுப்புரை |
| ஆட்டோ | தானே, தானாக |
| ஆட்டோமாட்டிக் | தன்னியக்கம், தானியங்கி |
| ஆட்டோகிராஃப் | நினைவேடு |
| ஆடம்பரம் | ஆராவாரப் போக்கு |
| ஆடிட்டர் | (கணக்கு) தணிக்கையாளர் |
| ஆடிட்டோரியம் | பெருங்கூடம், மண்டபம் |
| ஆடியோ | கேட்பொலி |
| ஆடியோ சிக்னல் | ஒலிக்குறி |
| ஆணவம் | செருக்கு |

| | |
|---|---|
| ஆணித்தரம் | உறுதி |
| ஆத்திரம் | மனக்கொதிப்பு |
| ஆத்ம சக்தி | உயிராற்றல், ஆன்ம ஆற்றல் |
| ஆத்ம சுத்தி | உயிர்த் தூய்மை,<br>ஆன்மத் தூய்மை |
| ஆத்மா (ஆன்மா) | மனம், உயிர் |
| ஆத்ம தர்சனம் | ஆன்ம நிலை அறிதல் |
| ஆத்ம விசாரணை | தன்னை ஆய்தல் |
| ஆத்ம ஞானம் | ஆன்ம அறிவு |
| ஆத்மானந்தம் | உயிரின்பம் |
| ஆத்மார்த்தம் | தன்பொருட்டு |
| ஆதங்கம் | கலக்கம், ஆவல் |
| ஆதரவு | தேற்றுகை |
| ஆதவன் | கதிரவன் |
| ஆத்மாவனுபவம் | தன்னை அறிந்துணர்தல் |
| ஆதரைஸ் | அதிகாரமளி, உரிமையளி |
| ஆதாரம் | பற்றுக்கோடு |
| ஆதாயம் | மிகு பயன் |
| ஆதி | முதல், தொடக்கம் |
| ஆதிக்கம் | மேலுரிமை |
| ஆதிகாலம் | பண்டைக்காலம் |

| | |
|---|---|
| ஆதித்தன் | கதிரவன் |
| ஆதியந்தம் | அடிமுதல் |
| ஆதிபத்தியம் | பேருரிமை, இறைமை, இறையாண்மை |
| ஆதினகர்த்தர் | சைவமடத் தலைவர் |
| அநந்தம் | மகிழ்ச்சி |
| ஆப்சன்ட் | வரா, இரா |
| ஆப்சன்ஸ் | வராமை, இராமை |
| ஆப்ட் | பொருத்தமான |
| ஆப்ஜெக்ட் கம்ப்யூட்டர் | இலக்குக் கணினி |
| ஆபத்து | பேரிடர், ஏதம் |
| ஆபரேட்டர் | இயக்குவிப்பவர் |
| ஆபரேஷன் | அறுவை, பண்டுவம் |
| ஆஃப் (மின்) | அணைப்பு |
| ஆபீசர் | அலுவலர் |
| ஆதரவு | சார்பு |
| ஆதரித்தல் | பேணுதல், புரித்தல் |
| ஆதவன் | ஞாயிறு, கதிரவன் |
| ஆதாயம் | பலன் |
| ஆதாரம் | சான்று |
| ஆபரணம் | அணிகலம் |

| | |
|---|---|
| ஆபாசம் | அருவருப்பு, இழி காமம் |
| ஆம்பிளிஃபயர் | ஒலிபெருக்கி |
| ஆம்பிஷன் | பேராவல் |
| ஆம்புலன்ஸ் | நோயாளி வண்டி |
| ஆம்னிபஸ் | ஒப்பந்தப் பேருந்து |
| ஆமோதித்தல் | வழிமொழிதல் |
| ஆயத்தம் | தொடக்கம் |
| ஆயாசம் | அயர்வு, களைப்பு |
| ஆயின்மென்ட் | களிம்பு |
| ஆயுள் | வாழ்நாள் |
| ஆயுதம் | கருவி, படைக்கலம் |
| ஆயுதபாணி | படைக்கலமேந்தி |
| ஆயுர்வேதம் | மருத்துவமுறை |
| ஆர்க்கிடெக்சர் | கட்டிடக் கலை நூல் |
| ஆர்கனிசேஷன் | அமைப்பு, அமைவனம் |
| ஆர்ச் | வளைவு, கவான் |
| ஆர்ட்டிஸான் | கைவினைஞர் |
| ஆர்டர் | ஆணை |
| ஆர்டினன்ஸ் | போர்த் தளவாடங்கள் |
| ஆர்ட் ஒர்க் | வரைகலை வேலை |

| | |
|---|---|
| ஆர்ட்டிஃபிசியல் | போலியான, செயற்கையான |
| ஆர்த்தடாக்ஸ் | பழமை சார்ந்த, வைதீக |
| ஆர்ப்பரித்தல் | ஆராவாரித்தல் |
| ஆர்மி | படை |
| ஆர்ஜிதம் | கையகப்படுத்தல் |
| ஆரம்பித்தல் | தொடங்குதல் |
| ஆரம்பம் | தொடக்கம் |
| ஆராதனை | வழிபாடு |
| ஆராதித்தல் | வழிபடல் |
| ஆரண்யம் | காடு |
| ஆரோகணம் | உயர்த்தல்,<br>ஏற்றல், ஏற்றம் |
| ஆரோக்யம் | நோயின்மை, உடல்நலம் |
| ஆருடம் | முன்னறிதல், நிமித்தம் |
| ஆல்பம் | திரட்டு வைப்பேடு, சேகர ஏடு |
| ஆல்கஹால் | வெறியம் |
| ஆல்டரேஷன் | மாற்றம் |
| ஆல்ரெடி | ஏற்கெனவே |
| ஆலம் | நஞ்சு |
| ஆலயம் | கோயில் |

| | |
|---|---|
| ஆலிங்கனம் | தழுவுதல் |
| ஆலோசனை | ஆய்வுரை |
| ஆலோசகர் | ஆய்வுரையாளர் |
| ஆலோசித்தல் | ஆழ நினைதல், ஆழ் சிந்தனை |
| ஆவேசம் | எழுச்சி, வேகம், வெறியுணர்ந்த |
| ஆன் (மின்) | தொடர்பு |
| ஆன்டிசெப்டிக் | நச்சுத் தடை, நச்சு நுண்மத் தடை |
| ஆன்லைன் டேட்டாபேஸ் (கணினி) | நேரடித் தகவல் தளம், உடன் நிகழ்வு தகவல் தளம் |
| ஆன்லைன் பிராசசிங் (கணினி) | உடன் நிகழ் செயலாக்கம் |
| ஆனந்தம் | களிப்பு |
| ஆன்டிபயாட்டிக் | நுண்ணுயிர்க் கொல்லி |
| ஆனந்த நித்திரை | இன்பத் துயில் |
| ஆனந்த மயம் | இன்ப நிறைவு |
| ஆனந்தம் | இன்பம் |
| ஆஷாடபூதி | மோசடியாள் |
| ஆஸ்பத்திரி | மருத்துவமனை |
| ஆஸ்பெஸ்டாஸ் | கல்நார் |
| ஆஸ்தானம் | அரசவை |
| ஆஸ்தான வித்வான் | அரசவைப் புலவன் |
| ஆஸ்தி | உடைமை |

| | |
|---|---|
| ஆஸ்திகர் | இறை நம்பிக்கையாளர் |
| ஆஸ்ரமம் | தவக்குடில் |
| ஆஜர் | வருகை |

## இ

| | |
|---|---|
| இக்கணம் | இப்போது |
| இகபரசுகம் | இம்மை மறுமை இன்பம் |
| இகபரம் | இம்மை மறுமை |
| இகபோகம் | இம்மையின்பம்,<br>இவ்வுலக இன்பம் |
| இகம் | இம்மை |
| இகலோகம் | இவ்வுலகம் |
| இங்க்பேடு | மைப்பட்டை |
| இங்கிதம் | இனிமை |
| இங்க் ஜெட் (கணினி) | மை பீச்சு, மை வழங்கி |
| இச்சகம் | முகமன் |
| இச்சை | விருப்பம், வேட்கை, விழைவு |

| | |
|---|---|
| இட்டாலிக் | சாய்வெழுத்து |
| இடபம் | எருது |
| இடியட் | முட்டாள், அறிவிலி |
| இண்டிகேட் | குறிப்பிடு |
| இண்டெலிஜென்ஸ் | அறிவுக்கூர்மை, நுண்ணறிவு |
| இத்தா (அரபி) | வெளிவராமை |
| இத்தியாதி | முதலான |
| இதயம் | உள்ளம் |
| இதம் | உவப்பு |
| இதிகாசம் | பழங்கதை |
| இதோபதேசம் | நல்லறிவுரை |
| இந்த்ரஜாலம் | மாயம், கண்கட்டு வித்தை |
| இந்திரியம் | விந்து, கரு உயிரணு |
| இபாதத்து (அரபி) | இறைக் கடமை |
| இப்தார் (அரபி) | நோன்பு திறப்பு |
| இம்ளிமென்டேஷன் | செயல்படுத்தல் |
| இம்ப்ரக்ட் | செயல் விளைவு |
| இம்போர்ட் | இறக்குமதி |
| இபுனு (அரபி) | வழித்தோன்றல் |
| இம்ப்ரசிவ் | உளத்தூண்டலான |

| | |
|---|---|
| இம்ப்ரஸ்ஷன் | பதித்தல் |
| இம்சித்தல் | வருத்துதல் |
| இம்மாரல் | ஒழுக்கமற்ற |
| இம்மென்ஸ் | அளவற்ற |
| இம்யூனிட்டி | தடுப்பாற்றல் |
| இமிட்டேஷன் | போலி |
| இ–மெயில் | மின் அஞ்சல் |
| இமேஜ் | கருத்துரு |
| இரணியா | குடலிரக்கம், குடல் பிதுக்கம் |
| இரயில் | தொடர் வண்டி, இருப்பூர்தி |
| இருதயம் | உள்ளம், நெஞ்சு, இதயம் |
| இருபோகம் | இருமுறை விளைச்சல் |
| இலவசம் | விலையின்மை |
| இலாகா | துறை |
| இலாஞ்சினை, இலச்சினை | அடையாளம் |
| இளம்பிராயம் | இளமைக் காலம் |
| இன்கம்டாக்ஸ் | வருமான வரி |
| இன்கிரீஸ் | பெருக்கம் |
| இன்சார்ஜ் | பொறுப்பிலுள்ள, உட்பொறுப்பு |
| இன்சல்ட் | இகழ்ச்சி, அவமதிப்பு |

| | |
|---|---|
| இன்சிடென்ஸ் | நிகழ்வு |
| இன்சிஸ்ட் | வற்புறுத்து |
| இன்செர்ட் | செருகு |
| இன்ட்ரெஸ்ட் | வட்டி, ஆர்வம், ஈடுபாடு |
| இன்டர்வியூ | நேர்காணல், நேர்முகம் |
| இன்டர்நெட் | இணையம் |
| இன்ட்டிமேஷன் | தகவல் |
| இன்டீட் | உண்மையாகவே |
| இன்டெக்ஸ் | அட்டவணை, பொருட்குறிப்பு |
| இன்டென்ஷன் | உட் கருத்து |
| இன்டைரக்ட் | மறைமுக, மறைவான |
| இன்ஃபர்மேஷன் ரெவல்யூஷன் | தகவல் புரட்சி |
| இன்ஃபெக்ஷன் | தொற்றுநோய் |
| இன்ஃபான்ட் | இளஞ்சிறார் |
| இன்புட் டேட்டா (கணினி) | உள்ளீட்டுத் தகவல் |
| இன்புட் (கணினி) | உள்ளீடு |
| இன்லாண்ட் கவர் | உள்நாட்டு அஞ்சலுறை |
| இன்வாய்ஸ் | விலைப்பட்டி |
| இன்வால்வ் | உள்ளாக்கு |
| இன்வென்ஷன் | புத்தாக்கப் புனைவு |

| | |
|---|---|
| இன்னசென்ட் | குற்றமற்ற, அப்பாவியான, புதிய கண்டுபிடிப்பு |
| இன்ஸ்ட்ரக்டர் | கற்பிப்பவர் |
| இன்ஸ்டால்மென்ட் | தவணை |
| இன்ஸ்பெக்டர் | ஆய்வாளர் |
| இன்ஸ்டிடியூட் | நிலையம் |
| இன்சார்ஜ் | உட்பொறுப்பு |
| இன்ஜெக்ஷன் | மருந்து ஊசி (போடுதல்) |
| இன்ஜுரி | படுகாயம் |
| இன்ஷ்யூரன்ஸ் | வாணாள் காப்பீடு, காப்பீடு, ஈட்டுறுதி |
| இனிஷியல் | முன்னெழுத்து |
| இஸ்யூ | வெளியீடு |
| இஷ்ட சித்தி | விருப்பப் பேறு |
| இஷ்டம் | விருப்பம், விழைவு |
| இந்திரியங்கள் | ஐம்பொறிகள் |

## ஈ

| | |
|---|---|
| ஈகோ | தன்முனைப்பு, தற்புகழ்ச்சி |
| ஈகுவல் | ஒத்த |
| ஈசன் | ஆள்வோன் |
| ஈசானம் | வடகீழ்ப்பகுதி |
| ஈம விதி | இறப்புச் சடங்கு |
| ஈமான் (அரபி) | நம்பிக்கை |
| ஈன சுரம் | தாழ்குரல் |
| ஈனன் | இழிவானவன், இழிந்தவன் |
| ஈனம் | இழிவு |
| ஈஸ்வர நிச்சயம் | இறையுண்மை |
| ஈஸ்வரன் | இறைவன் |
| ஈஸ்வரார்ப்பணம் | இறைவனுக்குரியதாக்கல் |
| ஈஸ்வரி | இறைவி |
| ஈஸ்வரியம் | இறைவனுக்குரிய |
| ஈஸ்வரோபாசனை | இறைவழிபாடு |
| ஈஸி | எளிதான |

## உ

| | |
|---|---|
| உக்கிரம் | கொடுமை, உச்சம், கடுமை |
| உச்சம் | உயர்ச்சி |
| உச்சி | முகடு, நுனி |
| உச்சிக்காலம் | நண்பகல் |
| உச்சரித்தல் | ஒலித்தல் |
| உசிதம் | தகுதி, மேன்மை |
| உத்தரம் | வடக்கு |
| உத்திரவு | ஆணை, கட்டளை |
| உத்தரிகை, ஒத்தரியம் | மேலாடை |
| உத்திரவாதம் | உறுதிப்பாடு |
| உத்தேசம் | எண்ணம், நோக்கம் |
| உத்தியோகம் | வேலை, பணி, முயற்சி |
| உத்திரகிரியை | இறுதிக் கடன் |
| உத்தமர் | சான்றோர் |
| உத்தமம் | மேன்மை |
| உத்தரம் | மறுமொழி, வடக்கு, விடை |

| | |
|---|---|
| உத்தரவு | கட்டளை, ஆணை |
| உத்தமபுருஷன் | சிறந்தவன் |
| உத்தேசித்தல் | கருதுதல் |
| உத்வேகம் | மனவெழுச்சி, மிகுவிரைவு |
| உதயம் | தோற்றம் |
| உதயன் | எழுகை |
| உதாரணம் | சான்று, எடுத்துக்காட்டு |
| உதயசூரியன் | கதிரவன், எழுஞாயிறு |
| உதரம் | வயிறு |
| உதிரம் | குருதி |
| உப்பசம், உப்பிசம் | வயிறு ஊதல் |
| உப்பரிகை | மேல்மாடம் |
| உபகரணம் | துணைப்பொருள், கருவி |
| உபகாரம் | உதவி, நன்றி |
| உபகாரி | உதவி செய்வோன் |
| உபசரணை | விருந்தோம்பல் |
| உபாத்தியாயர் | ஆசிரியர் |
| உபத்திரவம் | தொல்லை, இடர் |
| உபதேசம் | அறிவுரை |
| உபதேசி | அறிவுரையாளன் |

| | |
|---|---|
| உபதேசித்தல் | அறிவுறுத்தல் |
| உப நயனம் | பூணூல் அணியும் சடங்கு |
| உப அத்தியட்சகர் | துணைவேந்தர் |
| உபயோகம் | பயன்பாடு |
| உபன்யாசம் | விரிவுரை |
| உபமானம் | உவமை, எடுத்துக்காட்டு ஒப்புமை |
| உபமேயம் | உவமைப் பொருள் |
| உபசாரம் | வரவேற்பு, விருந்தோம்பல் பணிவிடை |
| உபயம் | அற உதவி |
| உபரி | மிகுதி |
| உபயோகம் | பயன்பாடு |
| உபாக்கியானம் | கதை |
| உபாசனை | வழிபாடு |
| உபாதை | நோவு, வலி |
| உபாயம் | சூழ்ச்சி |
| உபவாசம் | உண்ணாநோன்பு |
| உல்லாசம் | உவகை, உளக்களிப்பு, மிகுகளிப்பு |
| உலக மார்க்கம் | உலக நெறி |

| | |
|---|---|
| உலகானுபவம் | உலகப் பட்டறிவு |
| உலுத்தன் | கயவன் |
| உலோகம் | கனிமம் |
| உலோகார்த்தம் | உலகியல் |
| உலோபி | கஞ்சன், ஈயாதவர் |
| உவமானம் | உவமை |
| உவமேயம் | உவமித்தல் |
| உற்சவம் | திருவிழா |
| உற்சாகம் | உள்ளக்கிளர்ச்சி |
| உற்பத்தி | உருவாக்கம், விளைவிப்பு |
| உற்பாதம் | தீங்கு |
| உன்மத்தம் | வெறி |
| உன்மத்தான் | பித்தன், வெறியன் |
| உன்னதம் | உயர்ச்சி, விழுப்பம் |
| உன்னதஸ்தானம் | மேநிலை |
| உஜ்ஜீவனம் | உய்வு |
| உஷ்ணம் | வெப்பம் |
| உஷார் | கவனம் |
| உஸ்தாது (அரபி) | ஆசிரியர் |

## ஊ

| | |
|---|---|
| ஊகம் | அனுமானம், கருதல் |
| ஊகித்தல் | அனுமானித்தல், ஓர்தல் |
| ஊர்த்துவம் | மேல் நோக்கு, |
| ஊதாரி | விரையம் |
| ஊர்ஜிதம் | உறுதி |
| ஊனம் | குறைவு, இழிவு |

## எ

| | |
|---|---|
| எக்காளம் | பெருநகை, ஊது கருவி |
| எக்காலஜி | சூழலியல் |
| எக்கோ | எதிரொலி |
| எக்சேஞ்ச் | பரிமாற்றம் |

| | |
|---|---|
| எக்ஸ்ட்ராக்ட் | பிழிவு, சுருக்கம் |
| எக்ஸ்ட்ரா | மிகையான |
| எக்ஸ்டென்ஷன் | நீட்சி, நீட்டிப்பு, விரிவு, விரிவாக்கம் |
| எக்ஸ்பிரஸ் | விரைவு |
| எக்ஸ்பிரஸ் பஸ் | விரைவுப் பேருந்து |
| எக்ஸ்பிரஸ் போஸ்ட் | விரைவஞ்சல் |
| எக்ஸ்பீரியன்ஸ் | பட்டறிவு |
| எக்ஸ்பெர்ட் | வல்லுநர் |
| எக்ஸ்பெரிமன்ட் | செயலாய்வு |
| எக்ஸ்போர்ட் | ஏற்றுமதி |
| எக்ஸ்பைரி | கால முடிவு |
| எக்ஸ்ரே | ஊடுகதிர், எக்ஸ் கதிர், புதிர்க் கதிர் |
| எக்ஸ்ஃபிஸியோ | அலுவல் வழி |
| எக்ஸலண்ட் | மிகச்சிறந்த |
| எக்ஸாக்ட் | மிகச் சரியாக |
| எக்ஸிக்கியூட்டிவ் | செயலாட்சி |
| எக்ஸிக்யூஸ் | மன்னிப்பு |
| எக்ஸப்ஷன் | விதி விலக்கு |
| எக்ஸிமா | தோல் படை |

| | |
|---|---|
| எக்ஸைஸ் | கலால் |
| எக்சர்ஸைஸ் | பயிற்சி |
| எஞ்சின் | (இழு) பொறி |
| எஞ்சினியர் | பொறியர் |
| எஞ்சினியரிங் | பொறியியல் |
| எட்ஜ் | விளிம்பு |
| எடிட்டிங் | பதிப்பு, தொகுப்பு |
| எடிட்டர் | இதழாசிரியர், பதிப்பாசிரியர் |
| எண்டு | முடிவு |
| எத்தனம் | முயற்சி |
| எதார்த்தம் | உள்ள நிலைமை, இயல்பு நிலை |
| எதேச்சை | விரும்பும் வண்ணம், தன் விழைவு |
| எதேச்சாதிகாரம் | தன் விருப்பாட்சி |
| எந்திரம் | பொறி |
| எமகாதகன் | கொடியவன் |
| எஃபிசியன்ஸி | திறன்பாடு |
| எஃபெக்ட் | பாதிப்பு |
| எம்பளம் | சிறப்புக்குறி, இலச்சினை |
| எமன் | கூற்றுவன், கயவன் |

| | |
|---|---|
| எய்ட்ஸ் | ஏமக்குறைவு நோய், தேய்வு நோய் |
| எய்ம் | நோக்கம், குறிக்கோள் |
| எய்டு | உதவி |
| எயில்மென்ட் | நோய் |
| எய்ம் | நோக்கம், குறிக்கோள் |
| எல்டர் | மூத்தோர் |
| எமோஷன் | உள்ள எழுச்சி |
| எலாஸ்டிக் | நெகிழ், நெகிழ்திறம், நெகிழி |
| எலெக்ட்ரான் | மின்னணு |
| எலெக்ட்ரானிக்ஸ் | மின்னணுவியல் |
| எலெக்ட்ரிக் | மின் |
| எலெக்ட்ரிக் டிரெய்ன் | மின் தொடர்வண்டி, மின் இருப்பூர்தி |
| எலெக்ட்ரிக் மீட்டர் | மின் அளவி, மின்மானி |
| எலெக்ட்ரிக் ஸ்டவ் | மின் அடுப்பு |
| எலெக்ஷன் | தேர்தல் |
| எவிக்ஷன் | வெளியேற்றல் |
| எவிடன்ஸ் | சான்று |
| என்கிரேஜ் | ஊக்கு, தூண்டு |

| | |
|---|---|
| எண்டர்பிரைஸ் | வினைத்திட்டம் |
| என்டர்டைன்மென்ட் | கேளிக்கை |
| என்ட்ரி | நுழைவு, புகுவழி |
| என்லார்ஜ்மென்ட் | உருப்பெருக்கல் |
| என்ஸைம் | நொதிப்பி |
| எனாமல் | பற்சிப்பி |
| எனர்ஜி | ஆற்றல் |
| எனிமா | மலக்குடல் கழுவல் |
| எனிவே | எப்படியாவது, எவ்வாறேனும் |
| எஸ்டிமேட் | மதிப்பீடு |
| எஜமான் | முதலாளி, தலைவன் |

## ஏ

| | |
|---|---|
| ஏகம் | ஒன்று, தனிமை, ஒருமை |
| ஏகபோகம் | தனியுடைமை,<br>உளநிறைவின்பம், தனித்துய்ப்பு |

| | |
|---|---|
| ஏக சுபாவம் | ஒரே குணத்தன்மை |
| ஏக சிந்தை | ஒரே நினைவு |
| ஏகத்துவம் | ஓரிறைக் கொள்கை |
| ஏகாங்கி | தனியாள் |
| ஏகாந்தம் | தனிமை |
| ஏகாந்தஸ்தலம் | தனியிடம் |
| ஏகாதசி | பதினொராம் பிறை |
| ஏகாதிபத்தியம் | தனியாட்சி, ஓரரசு |
| ஏகாதிபதி | தனிப்பெரும் மன்னன் |
| ஏகோபித்தல் | ஒன்றுபடல் |
| ஏகதேசம் | ஓரளவு |
| ஏகதேவன் | தனித்த இறைவன் |
| ஏகநாதன் | தனித்தலைவன் |
| ஏகநாயகன் | ஒரே இறைவன் |
| ஏகபத்தினி | ஓர் மனைவி |
| ஏகபத்தினி விரதன் | ஓர் மனைவி உறுதியாளன் |
| ஏகம் | ஒருமைய |
| ஏகன் | தனி |
| ஏகாந்தம் | தனிமை |
| ஏகரூபன் | ஒரே வடிவம் |

| | |
|---|---|
| ஏகவாசம் | தனிவாழ்வு |
| ஏகவெளி | பெருவெளி |
| ஏகாதிபத்தியம் | தனியிறைமை |
| ஏகோபித்தல் | ஒருமுகமாக |
| ஏதம் | துன்பம் |
| ஏது (ஹேது) | காரணம், பொருட்டு |
| ஏகபரிபூரணம் | எங்குமுள ஓரிறைவன் |
| ஏர்கண்டிஷன் | காற்றுப்பதனம், குளிர்ப்பதனம் |
| ஏர் செல் | வான் பேசி |
| ஏர்ண்டு லீவ் | ஈட்டு விடுப்பு |
| ஏர்மெயில் | வானஞ்சல் |
| ஏர்பிரேக் | காற்று நிறுத்தி, காற்றுத் தடை |
| ஏர்போர்ட் | வானூர்தி நிலையம், விமான தளம் |
| ஏர்ஃபோர்ஸ் | வான்படை |
| ஏரியல் | வானலைவாங்கி, வான்கம்பி |
| ஏரோகிராம் | வானஞ்சல் |
| ஏரோனாட்டிக் | வானூர்தி இயல் |
| ஏவிகேஷன் | வான்துறை |
| ஏஜ் | அகவை, வயது |

| | |
|---|---|
| ஏஜெண்ட் | முகவர் |
| ஏஜென்ஸி | முகவர் முகாமை |

## ஐ

| | |
|---|---|
| ஐக்கியம் | ஒன்றுபடுதல், ஒற்றுமை |
| ஐசானம் (ஈசானம்) | வடகிழக்கு |
| ஐட்டம் | வகை, இனம், உருப்படி |
| ஐடால் | வழிபாட்டு உரு |
| ஐடியா | எண்ணம், கருத்து |
| ஐடியாலஜி | கருத்தியல் |
| ஐடென்டி | அடையாளம் |
| ஐடென்டிகல் | ஒத்த, ஒரே மாதிரியான |
| ஐடென்டிடிக் கார்டு | அடையாள அட்டை |
| ஐடென்டிஃபிகேஷன் | அடையாளம், அடையாளக் குறி, |
| ஐதீகம் | தொல்புனைவுரை |

| | |
|---|---|
| ஐந்தவி | கலைமகள் |
| ஐந்திரியம் | ஐம்பொறி தொடர்புள்ள |
| ஐம்பூதம் | ஐந்து அடிப்படை முதற்பொருள் |
| ஐயர்ன் | இரும்பு |
| ஐரனி | வஞ்சகப் புகழ்ச்சி |
| ஐராவதம் | வானவர் கோன் யானை |
| ஐவரி | தந்தம் |
| ஐஸ் | பனிக்கட்டி |
| ஐஸ்வரியம் | செல்வம், சொத்து |

## ஒ

| | |
|---|---|
| ஒஜீவனம் | உணவு |
| ஒப்பீனியன் | கருத்துரை, எண்ணம் |
| ஒமிஷன் | விடுபடல் |

| | |
|---|---|
| ஒய்யாரம் | வீறெழில் |
| ஒயர் | மின் கம்பி, மின்பினை |
| ஒயர்மேன் | மின் கம்பியாள் |
| ஒர்க்ஷாப் | பழுதகம், தொழிலகம், பட்டறை |
| ஒன்வே | ஒருவழிப்பாதை |
| ஒன்வே டிராஃபிக் | ஒருவழிச் செல்கை |
| ஒன்ஸ் | ஒருமுறை |
| ஒன்ஸ்மோர் | மறுபடியும் |

## ஓ

| | |
|---|---|
| ஓத் | உறுதிமொழி |
| ஓதனம் | உணவு |
| ஓட்டு | வாக்கு, ஒப்போலை |
| ஓட்டல் | உணவு விடுதி, சிற்றுண்டிச் சாலை, பயணியர் விடுதி |
| ஓப்பன் | திறப்பாக, வெளிப்படையாக |
| ஓப்பன் மார்க்கெட் | வெளிச்சந்தை, வெளி அங்காடி |
| ஓப்பனிங் | முதலாவதான, தொடக்கமான |

| | |
|---|---|
| ஓப்பனிங் பேலன்ஸ் | தொடக்க இருப்பு |
| ஓப்பனிங் செரிமனி | திறப்பு விழா |
| ஓப்பியம் | அபினி, கஞ்சா |
| ஓம் சாந்தி | வேள்விச் சடங்கு |
| ஓம குண்டம் | வேள்விக் குழி |
| ஓரல் | வாய்மொழி |
| ஓரல் ஆர்டர் | வாய்மொழி ஆணை |
| ஓவர் | மிகை, மேல் |
| ஓவர் ஆக்ட் | மிகை நடிப்பு |
| ஓவர்ஆல் | ஒட்டுமொத்தமான, எல்லாவற்றையும் உட்கொண்ட |
| ஓவர் எஸ்டிமேட் | மிகை மதிப்பீடு |
| ஓவர் ஒர்க் | மிகை வேலை |
| ஓவர் கம் | வெற்றிப்படை, விஞ்சி மேம்படு |
| ஓவர்கான்ஃபிடன்ஸ் | அளவுக்கு மீறிய தன்னம்பிக்கை |
| ஓவர்கோட் | மேலங்கி |
| ஓவர்சீயர் | மேற்பார்வையாளர் |
| ஓவர்டிராஃப்ட் | மிகைப்பற்று |
| ஓவர்டியூ | காலம் கடந்த, தவணை கடந்த நிலுவை |

| | |
|---|---|
| ஓவர்டேக் | முந்து |
| ஓவர்டைம் | மிகை நேரம் |
| ஓவர்டோஸ் | அளவுக்கதிக |
| ஓவர்சைட் | கவனக்குறைவு |
| ஓவர்டைம் அலவன்ஸ் | மிகை நேரப் படி |
| ஓவர்நைட் | முன்னிரவு |
| ஓவர்பிரிட்ஜ் | மேம்பாலம் |
| ஓவர்ஃபுளோ | வழிந்தோடல் |
| ஓவர்லுக் | புறக்கணிப்பு காணத் தவறுதல் |
| ஓவர்லேப்பிங் | செய்ததற்கு மேல் செய்தல் |
| ஓவர்வெயிட் | மிகை எடை |
| ஓவர்ஸீஸ் | கடல் கடந்த |
| ஓவராஹ்ல் | முழுப் பழுதுபார்ப்பு, செப்பனீடு |
| ஓவர்ஹியர் | ஒட்டுக்கேட்பு |
| ஓவர்ஹெட் | மேல்நிலை |
| ஓவர்ஹெட் டாங்க் | மேல்நிலைத் தொட்டி |
| ஓவன் | அடுப்பு, சூட்டுக்கலம் |
| ஓன் | தனக்குரிமையான |
| ஓனர்ஷிப் | உரிமை, உடைமை |
| ஔதாரியம் | பெருங்கொடை |
| ஔஷதம் | மருந்து |

# க

| | |
|---|---|
| க்ரைம் | குற்றம் |
| க்விஸ் | நொடி வினா விடை |
| கக்கூஸ் | கழிப்பறை, கழிவறை |
| ககனம் | வானம் |
| கங்கணம் | உறுதி |
| கங்காதேவி | நீர் இறைவி |
| கங்காதரன் | சிவன் |
| கஸ்மாலம் | அழுக்குடைய, தீய |
| கசாப்புக் கடை | இறைச்சிக் கடை |
| கஞ்சம் | வெண்கலம், தாமரை |
| கட்சி | அணி |
| கடம் | கைக்காப்பு |
| கடம் | குடம் |
| கடம்பன் | முருகன் |
| கடாட்சம் | அருள் |

| | |
|---|---|
| கடிதம் | மடல், முடங்கல் |
| கடிகாரம் | நேரங்காட்டி, மணிப்பொறி |
| கடிதாசி | தாள் |
| கடிகை | நாழிகை, திறவுகோல் |
| கடினம் | கடுமை, வன்மை |
| கடின சித்தம் | வன்னெஞ்சம் |
| கடூரம் | கொடுமை, கடுமை |
| கண்டக்டர் | நடத்துநர் |
| கண்டிஷன் | கட்டுப்பாட்டு விதி, வரைக்கட்டு |
| கண்டம் | நிலப்பிரிவு, கழுத்து |
| கண்டனம் | மறுப்பு, எதிர்ப்பு |
| கண்டி | கழுத்தணி |
| கண்டிகை | பதக்க அணி |
| கண்டித்தல் | ஒறுத்தல் |
| கண்ட ஸ்நானம் | கழுத்தளவு குளிப்பு |
| கண் திருஷ்டி | கண்ணேறு |
| கணம் | கூட்டம், குழுமம், நொடிப்பொழுது |
| கணிகை | விலைமகள் |
| கணிசம் | மேம்படு அளவு |

| | |
|---|---|
| கணிதம் | கணக்கு |
| கணித சாஸ்திரம் | கணக்கியல் |
| கணிதர் | கணக்கர் |
| கணி | கோளியல் வல்லுநர் |
| கதர் | கைந்நூல் |
| கதம்பம் | கூட்டு, கலவை |
| கதலி | வாழை |
| கதி | நிலை |
| கந்தம் | மணம், நாற்றம் |
| கந்த மூலம் | கிழங்கு |
| கந்தன் | முருகன் |
| கப் அண்ட் சாசர் | தட்டுக் கோப்பை |
| கப்பம் | திரை |
| கபம் | கோழை |
| கபடம் | வஞ்சகம், கரவு |
| கபடன் | வஞ்சகன் |
| கபடு | சூது |
| கபளீகரம் | முழுமையாக விழுங்கல், முற்றும் கவரல் |
| கபாடம் | கதவு |

| | |
|---|---|
| கபாலம் | மண்டையோடு |
| கபோதி | குருடன் |
| கம் (Gum) | ஒட்டுப்பசை |
| கம்பேக்ட் | கச்சிதமான |
| கம்ப்பல்ஷன் | வற்புறுத்தல் |
| கம்ப்ளைன்ட் | முறையீடு |
| கம்யூனிட்டி | குழுமம், சமுதாயம் |
| கம்யூனிசம் | பொதுவுடமை |
| கம்ப்யூட்டர் | கணினி, கணிப்பொறி |
| கம்ப்யூட்டர் சென்டர் | கணினி மையம் |
| கம்ப்யூட்டர் கிராஃபிக்ஸ் | கணினி வரைகலை |
| கம்ப்யூட்டர் கேம் | கணினி விளையாட்டு |
| கம்ப்யூட்டர் இன்ஜினீயரிங் | கணினிப் பொறியியல் |
| கம்ப்யூட்டர் இண்டஸ்டிரி | கணினித் தொழில் |
| கம்ப்யூட்டர் டிசைன் | கணினி வடிவமைப்பு |
| கம்ப்யூட்டர் ஜெனரேஸன்ஸ் | கணினித் தலைமுறைகள் |
| கம்பெனி | வாணிகக் குழாய், நிறுவனம், நிறுமம் |
| கம்பௌண்டர் | மருந்தாளர், கலப்பாளர் |
| கம்பம் | தூண் |

| | |
|---|---|
| கம்பீரம் | பெருமைத் தோற்றம், வீரான தோற்றம் |
| கமண்டலம் | கைக்குடுவை |
| கம்ப்யூட்டர் அப்ளிகேஷன் (கணினி) | கணினி பயன்பாடு |
| கம்பேக்ட் டிஸ்க் (கணினி) | குறுவட்டு |
| கம்யூனிகேஷன் | தகவல் தொடர்பு |
| கமர்ஷியல் டாக்ஸ் | வணிகவரி |
| கமாண்டு லாங்வேஜ் (கணினி) | கட்டளை மொழி |
| கமிஷனர் | ஆணையர் |
| கமிஷன் | ஆணையம் |
| கமிஷன் | கழிவு, தரகுத் தொகை |
| கமீஸ் | சட்டை |
| கர்சர் (கணினி) | இடஞ்சுட்டி, இடம் உணர்த்தி அம்புக்குறி |
| கர்ப்பிணி | கருவுற்ற பெண் |
| கர்த்தா | ஆக்கியோன் |
| கர்ப்பக்கிரகம் | கருவறை |
| கர்ணபூஷணம் | காதணி விழா |
| கர்ம பலன் | வினைப் பயன் |
| கர்ம சுத்தி | பணித் தூய்மை |

| | |
|---|---|
| கர்வம் | செறுக்கு, அகந்தை |
| கரகம் | வட்டில் |
| கரகோஷம் | கையொலி, கைதட்டல் |
| கரணம் | கருவி, ஐம்பொறி |
| கரதலம் | உள்ளங்கை |
| கரம் | கை |
| கரன்ட் | மின்னோட்டம், நடப்பு |
| கரன்ஸி | செலாவணி |
| கர்ஜனை | முழக்கம், உரப்பொலி |
| கர்ஜித்தல் | முழங்குதல் |
| கருணாகடாட்சம் | அருட்பார்வை |
| கருணை | இரக்கம் |
| கருமம் | வினை, தொழில், செயல் |
| கருமாதி | இறுதிக்கடன் |
| கரைக்ட் | சரியான |
| கரோசின் ஆயில் | மண்ணெண்ணெய் |
| கல்ச்சர் | பண்பாடு |
| கல்யாணம் | திருமணம் |
| கல்யாணப் பத்திரிகை | திருமண அழைப்பிதழ் |
| கலாசாலை | கல்லூரி, கல்விக்கூடம் |

| | |
|---|---|
| கலர் (சர்பத்) | வண்ண இன்சுவை நீர் |
| கவசம் | குடம் |
| கலாபம் | மயில் |
| கலாஞானம் | கலையறிவு |
| கலாநிதி | முனைவர் |
| கலிக்கம் | கண் மருந்து |
| கலோரி | வெப்ப அலகு |
| கவ்ண்டர் | செயலிட முகப்பு |
| கவ்ண்டர் பய்ல் | அடிச்சீட்டு |
| கவசம் | காப்புறை |
| கவச வாகனம் | காப்பூர்தி |
| கவனம் | உன்னிப்பு, விழிப்பு |
| கவர் | மேலுறை, அஞ்சலுறை, மூடி |
| கவர்னர் | ஆளுநர் |
| கவி | புலவன், கவிஞன் |
| கவித்துவம் | செய்யுள் திறன் |
| களேபரம் | குழப்பம் |
| கற்பக விருட்சகம் | கேட்பதைத் தரும் மரம் |
| கன்மம் | வினை |
| கன்விக்ஷன் | குற்றத்தீர்ப்பு |

| | |
|---|---|
| கன்வீனர் | அமைப்பாளர் |
| கன்னிகை | (மணமிலா) இளம்பெண் |
| கன்னிகாஸ்திரி | மணமிலாப் பெண் |
| கன்சூமர் | நுகர்வோர் |
| கனம் | பளு, சுமை |
| கனகம் | பொன் |
| கனகசபை | பொன்னம்பலம் |
| கனகாபிஷேகம் | பொன் திருமுழுக்கு |
| கனவான் | பெரியோன் |
| கனவாட்டி | பெருமாட்டி |
| கன்னி | குமரி |
| கனிஷ்டை | இளைய |
| கனிஷ்டம் | சிறு, கடைசி |
| கனிஷ்ட குமாரன் | இளைய மகன் |
| கஸ்டடி | பொறுப்பெல்லை, காப்பு, சிறைக்காப்பு |
| கஸ்டம் | சுங்கம் |
| கஸ்டமர் | வாடிக்கையாளர், வழமையாளர் |
| கஷ்டம் | கடினம், துன்பம் |
| கஜம் | யானை |

| | |
|---|---|
| கஜமுகன் | பிள்ளையார், யானைமுகன் |
| கஜானா | கருவூலம் |
| கஜேந்திரம் | யானை |
| கக்ஷி (கட்சி) | ஒருசார் கூட்டம் |
| கஷாயம் | மருந்து நீர் |
| காங்கிரஸ் | பேராயக் கட்சி |
| காதகன் | கொலையாளி |
| காதம் | தொலை, கொலை |
| காதகம் | கொலை |
| காப்பி | படி, நகல் |
| காப்பிரைட் | பதிப்புரிமை |
| காமென்ட் | கருத்துரை |
| காம்பன்சேஷன் | இழப்பீடு |
| காம்ப்ளிகேஷன் | சிக்கல் |
| காம்பௌண்டு | சுற்றுமதில் |
| காஃபி | குளம்பி |
| காய்ல் | சுருள், சுருணை |
| காயம் | புண், உடம்பு |
| கார் | சீருந்து |
| கார்ட் | தள்ளுவண்டி |

| | |
|---|---|
| கார்னர் | மூலை |
| கார்டனர் | தோட்டக்காரர் |
| கார்ட்டூன் | சிரிப்புப் படம், கருத்துப் படம் |
| கார்டியாலஜி | இதயவியல் |
| கார்பன் | கரிபுகை |
| கார்பன்டையாக்சைட் | கரியமிலவளி |
| கார் பார்க் | சீருந்து நிறுத்துமிடம் |
| கார்பன் பேப்பர் | கரித்தாள் |
| காரட் | செம்மஞ்சள் முள்ளங்கி |
| காரணம் | கரணீயம் |
| காரிய சாதனம் | வினை செய்வழி |
| காரியக் கமிட்டி | செயற்குழு |
| காரியதரிசி | செயலாளர் |
| காரியாலயம் | அலுவலகம், பணிமனை |
| காரியம் | செயல் |
| காரியஸ்தன் | செயலன் |
| கால்குலேட்டர் | கணிப்பி |
| கால்குலேஷன் | கணிப்பு |
| கால்சியம் | சுண்ணச்சத்து |

| | |
|---|---|
| காலண்டர் | நாட்காட்டி |
| காலனி | குடியிருப்பு |
| காலகதி | காலநடை, காலவோட்டம் |
| காலக்கிரமம் | காலவொழுங்கு |
| காலச்சக்கரம் | காலப்போக்கு |
| காலட்சேபம் | பொழுதுபோக்கு |
| காலதாமதம் | கால வேறுபாடு |
| காலவர்த்தமானம் | கால நிகழ்ச்சி |
| கால வித்தியாசம் | கால வேறுபாடு |
| கால வேகம் | கால விரைவு |
| காலாந்தரம் | கால முடிவு |
| காலாவதி | காலக்கடப்பு, கால எல்லை, கால முடிவு |
| காலி | இன்மை, வெறுமை |
| காவாலி | ஊர் சுற்றி, பொறுப்பற்ற |
| காவ்யம் | பாவியம் |
| கான்ட்டாக்ட் | தொடர்பு |
| கான்செ஺ப்ட் | கருதுகோள் |
| கான்஺பிடன்ஸ் | நம்பிக்கை |

| | |
|---|---|
| கான்ஸ்டிடியூஷன் | அரசமைப்பு |
| காஜி | இஸ்லாமிய சமய அறிஞர் |
| காஷன் | எச்சரிக்கை |
| கிட்னி | சிறுநீரகம் |
| கிடாரம் | கொப்பரை, கடாரம் |
| கித்தான் | முரட்டுத் துணி |
| கியாதி | புகழ் |
| கியூ | வரிசை முறை |
| கிரகச்சாரம் | கோள் நிலை |
| கிரகம் | கோள் |
| கிரகணம் | மறைத்தல், பிடித்தல் |
| கிரகதோஷம் | கோள் குற்றம் |
| கிரகப் பிரவேசம் | மனை புகல், புதுமனை புகுவிழா |
| கிரகஸ்தன் | இல்லறத்தான் |
| கிரகித்தல் | ஈர்த்தல், பற்றுதல் |
| கிரடிட் | கடன், நன்மதிப்பு, வரவு |
| கிரடிட்டர் | கடன்காரர் |
| கிரணம் | ஒளி, கதிர் |
| கிரந்தம் | நூல், ஒருவகை எழுத்து |

| | |
|---|---|
| கிரமம் | ஒழுங்கு, முறைமை |
| கிரயம் | விலை |
| கிரவுண்ட் | திடல் |
| கிராக்கி | அருமை, கருவிலை |
| கிராதி | மரச்சட்ட வேலி |
| கிராமம் | சிற்றூர் |
| கிராமப் பஞ்சாயத்து | ஊராட்சி மன்றம் |
| கிராம சேவகர் | சிற்றூர்த் தொண்டர் |
| கிராமியம் | நாட்டார் |
| கிராச் | கீறல் |
| கிராமபோன் ரிக்கார்டர் | இசைப் பதிவுத் தட்டு |
| கிராமியம் | ஊரியல் |
| கிராமணி | ஊர்த்தலைவன் |
| கிரான்ட் | மானியம் |
| கிராஜுவல் | சீராக, படிப்படியாக |
| கிரௌடு | மக்கள் கூட்டம் |
| கிரி | மலை |
| கிரிமினல் | குற்றவியல் |
| கிரிமினல் கேஸ் | குற்ற வழக்கு |

| | |
|---|---|
| கிரியை | சடங்கு, செய்கை |
| கிரைம் | குற்றம் |
| கிரீடம் | முடி |
| கிரீடை | மகளிர் நீர் விளையாட்டு |
| கிரீடாதிபதி | முடியுடை மன்னன் |
| கிருகம் | இல்லம் |
| கிருதி | செயல் |
| கிருபாகடாட்சம் | அருட்பார்வை |
| கிருபை | அருள் |
| கிருமி | நச்சு நுண்ணுயிர் |
| கிருஷ்ணபட்சம் | தேய்பிறை |
| கிருஷிகன் | உழவன் |
| கிருஷ்ண ஜயந்தி | கண்ணன் பிறந்த நாள் |
| கிரே | சாம்பல்நிறம் |
| கில்லாடி | மாரகன் |
| கிலி | அச்சம், நடுக்கம் |
| கிளிக் (கணினி) | சொடுக்கு |
| கிளையன்ட் | வாடிக்கையாளர் |

| | |
|---|---|
| கிளேசம் | கவலை |
| கிளப் | மன்றம் |
| கிளர்க் | எழுத்தர் |
| கிளாக் | கால அளவி |
| கிளினிக் | மருத்துவமனை |
| கிளீனர் | துப்புரவாளர் |
| கிளைம் | உரிமை கோரல் |
| கிளைமேக்ஸ் | உச்சகட்டம், உச்சகட்டக் காட்சி |
| கிஸ்தி | நிலவரி |
| கிஸான் | உழவர் |
| கீ | இசை |
| கீப்பர் | காப்பாளர் |
| கீ போர்டு (கணினி) | விசைப்பலகை, தட்டச்சுப் பலகை |
| கீர்த்தனை | புகழ்ப்பர், இசை உருப்படி |
| கீதம் | இசைப்பாடல் |
| கீர்த்தி | புகழ், பெருமை |
| கீலம் | கீற்று |
| கீனம் | இழிவு, குறைவு |

| | |
|---|---|
| குட்பை | சென்று மீள்க |
| குணம் | இயல்பு, பண்பு |
| குங்குமம் | செம்பொடி |
| குசிலம் | நலம் |
| குசினி | சமையல் அறை, அடிப்படி |
| குதம் | மல வாயில் |
| குணவான் | பண்பாளன் |
| குதர்க்கம் | அழிவழக்கு, அழிச்சாட்டம் |
| குதூகலம் | பெருங்களிப்பு, பேருவகை |
| குந்தகம் | தடை |
| குமாஸ்தா | எழுத்தர், எழுதுநர் |
| கும்மாளம் | கூத்தடிப்பு |
| கும்பம் | குடம், திரள் |
| கும்பாபிஷேகம் | குட முழுக்கு |
| குமாரன் | செல்வன், மகன் |
| குமாரி | செல்வி, மகள் |
| குரு | ஆசிரியர் |
| குரு சன்னிதானம் | குருவழி |

| | |
|---|---|
| குரு சேவை | ஆசிரியர் பணிவிடை |
| குரு பூஜை | குரு வழிபாடு |
| குரு வசனம் | குரு மொழி |
| குரூபி | அழகிலி |
| குரூரம் | கொடுமை |
| குரோத் | வளர்ச்சி |
| குரோதம் | உட்பகை, வன்மம், பழிவாங்கும் உணர்வு |
| குல ஸ்திரி | குல மகள் |
| குலவித்தை | குலத் தொழில் |
| குல்லா | தொப்பி |
| குவலயம் | உலகம் |
| குவாலிட்டி | பண்பு, தரம் |
| குளோனிங் | படியாக்கம் |
| குவான்டிட்டி | அளவு |
| குவாஸி கவர்ன்மென்ட் | அரசுச் சார்பு |
| குளிகை | மாத்திரை |
| குன்மம் | சூலை நோய் |
| குஷ்டம் | தொழு நோய் |

| | |
|---|---|
| குஸ்தி | மற்போர் |
| கூட்ஸ் | சரக்குத் தொடர் வண்டி |
| கூலிங்கிளாஸ் | குளிர் கண்ணாடி |
| கூவம் | கிணறு |
| கெமிகல் | வேதிப்பொருள் |
| கெஸட் | அரசிதழ் |
| கேசட் | ஒளிப் பேழை, ஒளிச் சுருள், நாடாப் பெட்டி |
| கேசம் | தலைமயிர் |
| கேசரி | அரிமா |
| கேடர் | பணிநிலைப் பிரிவு |
| கேட்டராக்ட் | விழிப்புரை |
| கேண்டீன் | பணிமனை சிற்றுண்டியகம் |
| கேந்திரம் | நடுவம் |
| கேப் | இடைவெளி |
| கேப்சூல் | குளிகை, மருந்து உறை |
| கேபினட் | அமைச்சரவை |
| கேம்ப் | தங்கல் |
| கேம்பஸ் | வளாகம் |

| | |
|---|---|
| கேமரா | காட்சிப் பதிவுக் கருவி |
| கேரியர் | தாங்கி |
| கேரோ | முற்றுகை |
| கேலரி | படியடுக்கு மேடை |
| கேலி | இகழ்ச்சி, இழிவு |
| கேளிக்கை | களியாட்டு |
| கேவலம் | சிறுமை |
| கேன்சர் | புற்றுநோய் |
| கேஸ்(GAS) | சமையல் வளிமம் |
| கேஸ் | வழக்கு, குறிப்பிட்ட நோய் |
| கேஸ்டிங் | வார்ப்பு |
| கேஷுவல் லீவு | தற்செயல் விடுப்பு, நேர்வு விடுப்பு |
| கொட்டேஷன் | விலைப்புள்ளி, மேற்கோள் |
| கொடூரம் | கொடுமைத் தோற்றம் |
| கொயட் | அமைதி |
| கோகிலம் | குயில் |
| கோட்டா | பங்கீடு |
| கோடு | வழக்கு |

| | |
|---|---|
| கோடௌன் | கிடங்கு, கிட்டங்கி |
| கோத்திரம் | குலம் |
| கோதண்டம் | வில் |
| கோதானம் | பசுக்கொடை |
| கோபம் | சினம் |
| கோபாக்னி | சினத் தீ |
| கோமயம் | பசு சிறுநீர் |
| கோமா | ஆழ் மயக்கம் |
| கோர்ட் | வழக்கு மன்ற அரங்கு, நீதிமன்றம் |
| கோரம் | கொடுமை, அழகின்மை |
| கோளம் | வட்டம் |
| கோணம் | முடக்கு |
| கோபம் | சினம், வெகுளி |
| கோரம் | கொடுமை |
| கோஷ்டி | கூட்டம், குழு |
| கோஷம் | முழக்கம், ஊக்கொலி |
| கைங்கர்யம் | உதவி |
| கைதி | சிறையாளி |

| | |
|---|---|
| கௌந்தி | பெண் துறவி |
| கௌபீனம் | கோவணம் |
| கௌலி | பல்லி |

## ச

| | |
|---|---|
| சக்களத்தி | உடன் கிளத்தி |
| சக்கரம் | உருளை |
| சக்கரவாளம் | வட்ட வடிவம் |
| சக்கிராயுதம் | எறி வளைய ஆயுதம் |
| சக்ராயுதன் | திருமால் |
| சக்கிரவர்த்தி | பேரரசன் |
| சக்தி | ஆற்றல் |
| சக்ரதாரி | திருமால் |
| சக | உடன், கூடவே |
| சகடம் | வண்டி |
| சகவாசம் | சேர்க்கை நட்பு, நட்புறவு |
| சகபாடி | உடனிருப்பவர் |
| சகலம் | அனைத்தும், எல்லாம் |

| | |
|---|---|
| சகல வியாபி | எங்கும் |
| சகஸ்ரநாமம் | ஆயிரம் திருப்பெயர் |
| சகஜம் | இயற்கை |
| சகஜான்யம் | நல்லுறவு |
| சகா | தோழன், கூட்டாளி |
| சகாயம் | உதவி, விலை நயம், நய விலை |
| சகி | தோழி |
| சகிதம் | உடன் |
| சகித்தல், சகிப்பு | பொறுத்தல் |
| சகுனம் | குறி |
| சகோதரன் | உடன் பிறந்தான் |
| சகோதரம் | உடன்பிறப்பு |
| சகோதரத்துவம் | உடன்பிறப்பியல் |
| சகோதர வாஞ்சை | உடன்பிறப்பன்பு |
| சகோதரி | உடன்பிறந்தாள் |
| சங்கமம் | ஆறு, கடல் கூடுகை |
| சங்கல்பம் | உறுதி பூணல் |
| சங்கம் | கழகம், அவை |
| சங்கரித்தல் | அழித்தல் |

| | |
|---|---|
| சங்கடம் | வருத்தம் |
| சங்கட்டம் | துன்பம் |
| சங்கதி | செய்தி |
| சங்கற்பம் | உறுதி பூணல் |
| சங்கிலி | தொடர், இணையம் |
| சங்கீதம் | இசை |
| சங்கீதக் கச்சேரி | இசை நிகழ்ச்சி |
| சங்கீத சாகித்யம் | இசைப்பயிற்சி |
| சங்கீத நிபுணர் | இசை வல்லுநர் |
| சங்கீதப் பாடகர் | இசை வல்லார் |
| சங்கீத வாத்யம் | இசைக் கருவி |
| சங்கேதம் | குறியீடு |
| சங்கநாதம் | சங்கோசை, முழக்கம் |
| சங்கோஜம் | கூச்சம், வெட்கம் |
| சங்கை | பெருமை |
| சச்சரவு | பிணக்கு |
| சஞ்சரி | உலவு |
| சஞ்சரித்தல் | உலவுதல் |
| சஞ்சலம் | உளத்துன்பம், கலக்கம் |

| | |
|---|---|
| சஞ்சிகை | இதழ், தாளிகை |
| சடம் | உடல், இயங்கா உடல் |
| சடத்துவம் | பருப்பொருள் |
| சடா மகுடம் | சடை முடி |
| சடுதி | விரைவு |
| சண்டப் பிரசண்டம் | மிக விரைவாக |
| சண்ட மாருதம் | புயற்காற்று |
| சண்டாளம் | இழிவு |
| சண்டாளர் | புலையர் |
| சண்டி | காளி |
| சண்டித்தனம் | முரட்டுத் தனம் |
| சத்தம் | ஓசை, ஒலி |
| சத்திய நிருவாணம் | மறு பிறவி |
| சத்தியப் பிரமாணம் | உறுதிமொழி |
| சத்தியம் | உண்மை, வாய்மை |
| சத்திர சிகிச்சை | அறுவை மருத்துவம் |
| சத்திய வசனம் | உண்மையுரை |
| சத்திரம் | சாவடி |
| சத்திரம் (சஸ்திரம்) | கத்தி, அறுவை |

| | |
|---|---|
| சத்தியாக்கிரகம் | மெய்யுறுதிப் போராட்டம், அறப்போராட்டம் |
| சத்து | சாரம், ஊட்டம் |
| சத்துரு | பகைவன் |
| சத்துவம் | அமைதி |
| சத்வகுணம் | அமைதித் தன்மை |
| சதகோடி | நூறுகோடி |
| சதம் | நூறு |
| சதவீதம் | விழுக்காடு |
| சதா | எப்போதும் |
| சதி | இறைவி, உமை, சூழ்ச்சி, வஞ்சனை |
| சதிபதி | கணவன் மனைவி |
| சதுக்கம் | நால்மூலை |
| சதுரங்கம் | நாற்கோணம் |
| சதுரம் | நாற்பக்கம் |
| சதுரர் | அறிவாளி |
| சந்தடி | ஆராவாரம், இரைச்சல் |
| சந்தானம் | வழிவழி, தொடர் |
| சந்தான விருத்தி | வழி வழி பெருகுதல் |

| | |
|---|---|
| சந்ததம் | எப்போதும் |
| சந்தம் | செய்யுளோசை, இன்னோசை |
| சந்தர்ப்பம் | சமயம், போது |
| சந்ததி | மரபினர் |
| சந்தா | முறைக் கட்டணம் |
| சந்தானம் | வழி முறை, தலைமுறை |
| சந்தி | மாலைப் பொழுது, கூடல் |
| சந்தியா காலம் | மாலைப் பொழுது |
| சந்தியா வந்தனம் | காலை மாலை வணக்கம் |
| சந்திர கலை | நிலாக் கூறு |
| சந்திப்பு | காணுகை |
| சந்திரன் | நிலா |
| சந்திர ஹாரம் | பிறைவடம் |
| சந்து | பொருத்து |
| சந்தேகம் | ஐயப்பாடு |
| சந்தை | அங்காடி |
| சந்தோஷம் | மகிழ்ச்சி, களிப்பு |
| சந்நிதானம் | முன்னிலை |
| சந்நியாசி | துறவி |
| சப் | சார்பு |
| சப்தம் | ஓசை, ஒலி |

| | |
|---|---|
| சப்த வர்ணம் | ஏழு வண்ணம் |
| சப்த சுரம் | ஏழிசை |
| சப்தித்தல் | ஒலித்தல் |
| சப்ளை | வழங்கல் |
| சப்ரமஞ்சம் | ஒப்பனைக் கட்டில் |
| சப்பாத்து | மூடு காலணி |
| சபதம் | சூளுரை |
| சபலம் | மன அலைவு, வேண்டா ஆசை |
| சபா | மன்றம் |
| சபை | அவை |
| சம்மன் | அழைப்பாணை |
| சம்மதம் | உடன்பாடு |
| சம்மதி | உடன்படு, இசைவு, இணக்கம் |
| சம்மேளனம் | ஒன்றியம் |
| சமத்து | திறமை |
| சம்பத்து | சொத்து |
| சம்ரட்சனை | பாதுகாப்பு |
| சம்பந்தம் | தொடர்பு |
| சம்பவம் | நிகழ்ச்சி, நிகழ்வு |
| சம்பளம் | ஊதியம் |
| சம்பிரதாயம் | மரபு முறை, வழக்கு முறை |

| | |
|---|---|
| சம்பாத்தியம் | வருவாய், ஈட்டல் |
| சம்பாவனம் | நன்கொடை |
| சம்பாஷணை | உரையாடல் |
| சம்பூர்ணம் | முழுமை, நிறைவு |
| சம்போகம் | சேர்க்கை |
| சம்சாரம் | வாழ்க்கைத்துணை, குடும்ப வாழ்வு |
| சமம் | நிகர் |
| சமகாலம் | ஒத்தகாலம் |
| சமர்ப்பணம் | அளித்தல் |
| சம்சயம் | ஐயப்பாடு |
| சம்வத்சரம் | ஆண்டு |
| சமதளம் | ஒத்த தரை |
| சமதை | ஒப்பு |
| சமயம் | பொழுது, நெறி |
| சமர் | போர் |
| சமர்த்து | திறமை |
| சமர்த்தன் | வல்லவன் |
| சமத்துவம் | ஒத்த நிலை |
| சமரசம் | ஒற்றுமை |

| | |
|---|---|
| சமர்ப்பணம் | அளித்தல், காணிக்கை, படையல் |
| சமரசம் | ஒற்றுமை, ஒருமிப்பு |
| சமாதி | கல்லறை |
| சமாச்சாரம் | செய்தி |
| சமாதானம் | இணக்கம் |
| சம பலம் | ஒத்த வலிமை |
| சமய தீட்சை | சமய அறிவுறுத்தல் |
| சமய பேதம் | கால வேறுபாடு |
| சம போகம் | ஒத்த இன்பம், சரியளவு கொளல் |
| சமய தீட்சை | சமய அறிவுறுத்தல் |
| சமயோஜிதம் | நிலைமைக்கேற்ப |
| சமாதி | பிணக்குழி, இறப்புக்குழி, கல்லறை அடக்கவிடம், கல்லறை |
| சமாப்தம் | முழுமையடைந்தது |
| சமஸ்கிருதம் | வடமொழி |
| சமஷ்டி | தொகுப்பு |
| சமிக்ஞை | அறிகுறி, சைகை |
| சமிதி | அமைப்பு |
| சமீபம் | அண்மை, அருகில் |

| | |
|---|---|
| சயனம் | தூக்கம் |
| சமுக்காளம் | விரிப்பு |
| சமூகம் | திருமுன் |
| சமுகம் | முன்னிலை |
| சமுத்திரம் | பெருங்கடல் |
| சமுச்சயம் | ஐயம் |
| சமுதாயம் | குமுகாயம், மக்கட் குழுமம் |
| சமுத்திரம் | பெருங்கடல், பேராழி |
| சமூக சேவகி | குமுகத் தொண்டகி |
| சமேதம் | கூடியிருத்தல் |
| சயனம் | உறக்கம், துயில் |
| சர்க்கரை | சருக்கரை |
| சர்க்கிள் | வட்டாரம், வட்டம் |
| சர்க்குணம் | நல்லியல்பு |
| சர்க்குலர் | சுற்றறிக்கை |
| சர்க்யூட் | மின் சுற்று, மின் இணைப்பு |
| சர்ச்சை | ஆராய்ச்சி விவாதம், கருத்து முரண் |
| சர்ப்பம் | பாம்பு |
| சர்பத் | இன்சுவை நீர் |

| | |
|---|---|
| சர்ஃபேஸ் | மேற்பரப்பு |
| சர்டிபிகேட் | சான்றளிப்பு, சான்றிதழ் |
| சர்டிபிகேட் ஆப் போஸ்டிங் | சான்றஞ்சல் |
| சர்மம் | தோல் |
| சர்வகலாசாலை | பல்கலைக்கழகம் |
| சர்வசக்தி | பேராற்றல் |
| சர்வதேசம் | அனைத்து நாடுகள் |
| சர்வம் | அனைத்தும், எல்லாம் |
| சர்வாதிகாரம் | கொடுங்கோன்மை, வல்லாட்சி |
| சர்வாதிகாரி | கொடுங்கோன்மையர், வல்லாட்சியர் |
| சர்வே | அளவை |
| சர்வேயர் | நில அளவையர் |
| சர்வோதயம் | அனைத்தெழுகை, அனைத்தெழுச்சி |
| சர்ஜரி | அறுவை மருத்துவம் |
| சர்ஜன் | அறுவை மருத்துவர் |
| சரசம் | இன்ப விளையாட்டு |
| சரணம் | அடைக்கலம் |
| சரணாகதி | புகலடைதல், அடைக்கலம் |

| | |
|---|---|
| சரணாலயம் | புகலிடம் |
| சரணம் | ஒழுங்கு |
| சரம் | தொகுப்பு |
| சரமாரி | அம்பு மழை |
| சரணம் | ஆற்றொழுக்கு |
| சராசரி | பொது நிலை |
| சரித்திரம் | வரலாறு |
| சரிதம், சரிதை | வரலாறு |
| சரீரம் | உடல் |
| சருமம் | தோல் |
| சார்ஜ் | வலுவூட்டம், மின்னூட்டம், கட்டணம் |
| சல்லாபம் | உரையாடல் |
| சலனம் | அசைவு |
| சலபதி (ஜலபதி) | மழைக்கடவுள் |
| சலதாலை (ஜலதாரை) | நீரொழுக்கு |
| சலாகை | அம்பு |
| சலான் | செலுத்துச் சீட்டு |
| சலூன் | முடி திருத்தகம் |
| சவம் | பிணம், இறப்புடல் |

| | |
|---|---|
| சவால் | அறைகூவல், சூளுரை |
| சவாரி | செலுத்துகை |
| சவக்கிரியை | பிணச்சடங்கு |
| சவிதா | கதிரவன் |
| சௌக்கியம் | நலம் |
| சவிஸ்தாரம் | விரிவான |
| சன்மார்க்கம் | நன்னெறி |
| சன்மானம் | அன்பளிப்பு |
| சஸ்பென்ஸ் | உறுதியற்ற நிலை |
| சஸ்பென்சன் | இடை நீக்கம், இடை ஓய்வு நிலை, இடைப் பதவி நீக்கம் |
| சஸ்பெண்டு | பணி இடை நீக்கம் |
| சஜ்ஜஷன் | புதுக்கருத்து, தூண்டுரை |
| சாக்கு | புகல் |
| சாகசம் | துணிவுச்செயல் |
| சாகரம் | கடல் |
| சாஹித்தியம் | இசைப் பாடல், இலக்கியம் |
| சாகுபடி | பயிரிடல் |
| சாங்ஷன் | ஒப்பளிப்பு |

| | |
|---|---|
| சாங்கோபாங்கம் | எல்லாம் |
| சாசனம் | ஆவணம் |
| சாசுவதம் | நிலைத்த, அழியாத |
| சாதகம் | பயிற்சி |
| சாதம் | சோறு |
| சாதனம் | வழிமுறை, கருவி |
| சாதனை | அருஞ்செயல், செயல்திறன் |
| சாதாரணம் | பொதுநிலை |
| சாஸ்திரம் | இயல், நூல் |
| சாத்விகம் | பொறையுடைமை |
| சாங்கியம் | சடங்கு |
| சாங்கோபாங்கம் | முழுமை |
| சாட்சி | சான்று, சான்றாளர் |
| சாட்சியம் | சான்றுரை |
| சாத்தியம் | இயல்வது |
| சாதுர்யம் | அறிவுக் கூர்மை, நுண்திறன் |
| சாது | பொறையர் |
| சாந்தி | அமைதி |
| சாந்தம் | அமைதி, பொறை |

| | |
|---|---|
| சாம்பார் | குழம்பு |
| சாபம் | கெடுமொழி |
| சாஃப்ட்வேர் (கணினி) | மென்பொருள் |
| சாம்பிள் | மாதிரி |
| சாம்ராஜ்யம் | பேரரசு |
| சாமர்த்தியம் | திறமை, வல்லமை |
| சாமான் | பொருள் |
| சாமான்யம் | எளிய, சிறிய, பொது |
| சாயந்திரம் | மாலை வேளை |
| சாயம் | நிறம் |
| சாயை | நிழல் |
| சாரதி | வலவன், ஓட்டுநர், செலுத்துநர் |
| சாரம் | சாறு |
| சார்ஜ் | கட்டணம் |
| சாராம்சம் | திரட்சி, பொழிப்பு |
| சாரி | வரிசை |
| சாரீரம் | குரல் |
| சால்ஜாப்பு | சாக்குப் போக்கு புகல் |
| சாவகாசம் | மெதுவாக |

| | |
|---|---|
| சாவதானம் | ஒழிவாக |
| சாவி | திறவுகோல் |
| சானிட்டேஷன் | துப்புரவு |
| சாஸ்திரம் | கலை |
| சாஹித்தியம் | புலமை |
| சாஹிப் | தோழர் |
| சிக், சீக்கு | நோயாளி |
| சிக்கன்பாக்ஸ் | சின்னம்மை |
| சிக்னல் | அறிகுறி, சைகை |
| சிக்னேச்சர் | கையொப்பம் |
| சிகரம் | உச்சி, முகடு, முகட்டணி |
| சிகிட்சை | மருத்துவம், நோயகற்றல் |
| சிகை | தலை மயிர், முடி |
| சிங்காசனம் (சிம்மாசனம்) | அரியணை |
| சிங்க்ரோனஸ் | ஒத்தியக்க, சீராக, சேர்ந்தாற்போல் |
| சிங்கம் | அரிமா |
| சிங்காரம் | அழகு, ஒப்பனை |
| சிங்காசனம் | அரியணை |

| | |
|---|---|
| சிசு | குழந்தை, குழவி |
| சிசுவதை, சிசுஹத்தி | குழந்தைக் கொலை |
| சிட்சித்தல் | தண்டித்தல் |
| சிட்டிஸன் | குடிமகன் |
| சிட்சை | கற்பித்தல், படிப்பித்தல், பயிற்சி |
| சிட்டி | மாநகர் |
| சிட்ஃபண்டு | சீட்டு, நிதியம் வைப்பு |
| சிண்டிகேட் | ஆட்சியவை, ஆட்சி மன்றம் |
| சித்த சித்தி | உளத்தூய்மை |
| சித்தம் | உள்ளம் |
| சித்தர் | அறிவாளர் |
| சித்தி | உள்ளம், எண்ணம் |
| சித்தாந்தம் | அறுதி முடிவு, கோட்பாடு |
| சித்தித்தல் | வாய்த்தல் |
| சித்திரம் | ஓவியம் |
| சித்திரவதை | வன்துன்பம் |
| சித்து | அறிவு |
| சிந்தனை | எண்ணம், கருத்து |
| சிநேகம் | நட்பு |

| | |
|---|---|
| சிநேகிதம் | நட்பு, நேயம் |
| சிநேகிதன் | தோழன் |
| சிந்தை | எண்ணம் |
| சிந்தனை | கருத்து |
| சிந்தித்தல் | கருதுதல் |
| சிந்து | கடல், பாட்டு |
| சிந்தூரம் | செந்நிறத் தூள் |
| சிப் (கணினி) | சிப்பு, சிம்பு |
| சிப்பாய் (உருது) | படைவீரன் |
| சிபார்சு (உருது) | பரிந்துரை |
| சிம்பல் | குறியீடு, குழூஉக்குறி |
| சிம்னி | புகைக்கூண்டு, புகை போக்கி |
| சிமெண்ட் | காரை, சிமிட்டி |
| சிமிட்ரி, சிமிலர் | ஒத்த |
| சிலிண்டர் | நீளுருளை |
| சிரசு, சிரம் | தலை |
| சிரஞ்சீவி | நீடுவாழ்வோன் |
| சிரத்தை | உள ஈடுபாடு, நாட்டம் |
| சிரமப் பரிகாரம் | இளைப்பாறல் |

| | |
|---|---|
| சிரம் | தலை |
| சிரஸ் | தலை |
| சிரமம் | தொல்லை, கடினம், உழைப்பு |
| சிரார்த்தம் | நீத்தார் நினைவுநாள் |
| சிருங்கார ரசம் | இன்பச் சுவை |
| சிருஷ்டி | படைப்பு |
| சிரேஷ்டம் | சிறப்பு |
| சிரேஷ்டர் | சான்றோர் |
| சிலாக்கியம் | சிறப்பு, மேன்மை |
| சிலாகித்தல் | புகழ்தல் |
| சில்ப சாஸ்திரம் | கல்தச்சவியல் |
| சில்பம், சிற்பம் | சிலை |
| சிலா | கல்லுரு |
| சிலாக்கியம் | மேன்மை |
| சிலேடை | இரட்டுறு மொழி |
| சிவகதி | சிவப்பேறு |
| சிவபோதம் | மெய்யுணர்வு |
| சிவிகை | பல்லக்கு |
| சிவியர் | கடும், தீவிர |

| | |
|---|---|
| சிவில் | குடிமை |
| சிவில் கேஸ் | உரிமை வழக்கு |
| சிற்ப வித்தை | கல்தச்சத் திறன் |
| சிற்பி | கல்தச்சர் |
| சின்னம் | குறி, அடையாளம் |
| சின்னாபின்னம் | உருக்குலைவு |
| சினிமா | திரைப்படம் |
| சினிமா தியேட்டர் | திரையரங்கு |
| சினி டைரக்டர் | திரைப்பட இயக்குநர் |
| சிஷ்யன் | மாணாக்கன், சீடன் |
| சிஸ்டம் | அமைப்பு, முறைமை |
| சீக்கிரம் | விரைவு |
| சீசன் | பருவகாலம் |
| சீட்டி | கீழ்க்கை |
| சீட்டு (உருது) | துண்டு |
| சீசன் டிக்கெட் | பொழுதுச் சீட்டு |
| சீசா | குப்பி, போத்தல் |
| சீதோஷ்ணம் | தட்பவெப்பம் |
| சீதம் | குளிர்மை |
| சீதளம் | குளிர்ச்சி |

| | |
|---|---|
| சீதனம் | சீர்செனத்தி, சீர்வரிசை |
| சீமந்தம் | வளைகாப்பு |
| சீமந்தப் புத்திரன் | மூத்தமகன் |
| சீமாட்டி | திருவாட்டி |
| சீமான் | செல்வர் |
| சீமெயில் | கடலஞ்சல் |
| சிரீபாதம் (ஸ்ரீ பாதம்) | திருவடி |
| சீக்ரட் | கமுக்கம் |
| சீறா (புராணம்) | வாழ்க்கை வரலாறு |
| சீரியல் | தொடர் வரிசை |
| சீரிஸ் | தொடர் |
| சீல் | அடையாளச் சின்னம்,<br>இலாஞ்சினை |
| சீலம் | ஒழுக்கம், பண்பு |
| சீவகாருண்யம் | உயிரிடத்து அன்பு |
| சீவகாருண்யன் | அருளாளன் |
| சீ வீட் | கடற் பாசி |
| சுக்கான் | திருப்பி |
| சுக ஜீவனம் | நல்வாழ்வு |
| சுக துக்கம் | இன்ப துன்பம் |

| | |
|---|---|
| சுகந்தம் | நறுமணம், நல்வாடை |
| சுகந்தப் பரிமளம் | நறுமணம் |
| சுகபோகம் | இன்ப நுகர்ச்சி |
| சுகம் | நலம், இன்பம் |
| சுகவீனம் | நலமின்மை, நலக் குறைவு |
| சுகாதாரம் | நலவழி |
| சுகானுபவம் | இன்ப நுகர்ச்சி |
| சுகித்தல் | துய்த்தல், நுகர்தல் |
| சுகிர்தம் | இன்பம் |
| சுக்கிரவாரம் | வெள்ளிக்கிழமை |
| சுக்கிலபட்சம் | வளர்பிறை |
| சுசுருட்சை | பணிவிடை |
| சுங்கம் | ஆயம் |
| சுண்ணம் | நீறு, பொடி |
| சுதந்திரம் | முழு உரிமை, தன்னுரிமை |
| சுத்த சுயம்பிரகாசம் | தூயவொளி |
| சுத்தம் | தூய்மை |
| சுதந்திரம் | தன்னுரிமை, தன்னாட்சி |
| சுதேசம் | தாய்நாடு, தன்னாடு |
| சுதேசி | நாட்டவன் |

| | |
|---|---|
| சுந்தரம் | அழகு, எழில் |
| சுந்தரி | அழகி |
| சுபக்கிரியை | நற்செயல் |
| சுபகாரியம் | மங்கல நிகழ்ச்சி |
| சுப சகுனம் | நற்குறி |
| சுப தினம் | நன்னாள் |
| சுபம் | மங்கலம் |
| சுப வசனம் | நல்லுரை |
| சுபாவம் | இயல்பு |
| சுபிட்சம் | வளமை , செழிப்பு |
| சுமார் | ஏறத்தாழ |
| சுமுகம் | நல்லுறவு |
| சுயநலம் | தன்னலம் |
| சுயபாஷை | தாய்மொழி, தன் மொழி |
| சுய புத்தி | தன்னறிவு |
| சுயம் | தன்னிலை |
| சுயம்வரம் | தானேற்கும் திருமணம் |
| சுயராஜ்யம் | தன்னாட்சி |
| சுயாதீனம் | தனக்குரிமை |
| சுயம்பு | தான்தோன்றி |

| | |
|---|---|
| சுரங்கம் | கீழ்மண்ணறை, நிலத்தடி வழி |
| சுரம் | வழி |
| சுருதி | ஒலி, இயைந்த ஒலி |
| சுல்தான் | மன்னன் |
| சுலபம் | எளிது |
| சுலோகம் | தொடர்மொழி |
| சுலோகன் | ஊக்கொலி |
| சுவிட்ச் | மின்விசை மாற்றுக்குழல் |
| சொரூபம் | உண்மை வடிவம் |
| சுவர்க்கம் | பேரின்ப வீடு, வீடு பேறு, துறக்கம் |
| சுவர்க்க மார்க்கம் | வீடுபேறுவழி |
| சுவர்க்க லோகம் | விண்ணுலகம் |
| சுவர்ணம் | பொன் |
| சுவர்ணதானம் | பொற்கொடை |
| சுவப்னம், சொப்பனம் | கனவு |
| சுவாசம் | மூச்சு, உயிர்ப்பு |
| சுவாச பலம் | மூச்சு வலிமை |
| சுவாசகாசம் | இளைப்பு இருமல் |
| சுவாசித்தல் | மூச்சு வாங்குதல் |

| | |
|---|---|
| சுவாசாகயம் | மூச்சுப்பை |
| சுவாத்தியம் | காலநிலை |
| சுவாதீனம் | தன்னாட்சி |
| சுயார்ஜிதம் | தான் தேடிய பொருள் |
| சுவீகாரம் | தத்தெடுத்தல், மகவேற்கை |
| சுவீகரித்தல் | வலிந்தேற்பு |
| சுவீகாரப் புத்திரன் | தத்துப்பிள்ளை |
| சுயேட்சை | தனியன் |
| சூக்குமம் | நுண்மை |
| சூக்கும சரீரம் | நுண்ணுடல் |
| சூசகம் | குறிப்பு, அறிகுறி |
| சூஃபி | மெய்ஞ்ஞானி |
| சூட் | உரிமை வழக்கு, வழக்கீடு<br>வழக்குத் தொகுப்பு |
| சூட்சமம் | நுண்ணிய |
| சூட்கேஸ் | உடைத் தூக்கு |
| சூட்டிங் | படப்பிடிப்பு |
| சூத்திரம் | நூற்பா, கயிறு |
| சூத்திரகாரி | பொம்மையாட்டுவோன்,<br>இயக்குவிப்போர் |

| | |
|---|---|
| சூது | வஞ்சகம், கரவு |
| சூப்பர் மார்கெட் | பேரங்காடி, சிறப்பங்காடி |
| சூரணம் | தூள் |
| சூரன் | வீரன் |
| சூரியன் | ஞாயிறு, கதிரவன் |
| சூரிய கிரகணம் | கதிரவன் ஒளி மறைத்தல் |
| சூரிய கிரணம் | கதிரவன் கதிர் |
| சூரிய நமஸ்காரம் | கதிரவன் வணக்கம் |
| சூரியப் பிரகாசம் | கதிரவன் ஒளி |
| சூரிய மண்டலம் | கதிரவன் வட்டம் |
| சூரியன் | கதிரவன் |
| சூரியாஸ்தமனம் | கதிரவன் மறைவு |
| சூலம் | வேல் |
| சூன்யம் | இன்மை, வெற்றிடம் |
| செக்ஸ் | பாலுணர்வு |
| செக் | காசோலை |
| செக்டர் | பிரிவு |
| செக்ஷன் | கூறு, பகுதி |
| செல் | மின்கலம் |
| செல்லூலர் ஃபோன் | செல்பேசி, செல்லிடப் பேசி |

| | |
|---|---|
| செலக்ஷன் | தேர்ந்தெடுத்தல் |
| செலான் | செலுத்துச் சீட்டு |
| செலவாணி (உருது) | பணமாற்று |
| செரிமனி | சடங்கு |
| செனட் | பேரவை |
| சென்சஸ் | குடிக்கணக்கு, மக்கள் தொகைச் கணக்கெடுப்பு |
| சென்டர் | மையம் |
| சென்சார் | தணிக்கை |
| செஷன் | அமர்வு |
| சேகரம் | தொகுப்பு |
| சேங்ஷன் | ஒப்பளிப்பு, அனுமதி |
| சேடிகை | பணிப்பெண் |
| சேட்டை, சேஷ்டை | குறும்பு |
| சேடம் | இறுதி மூச்சு |
| சேடி | தோழி, பாங்கி |
| சேணம் | பரியாணை, பரி மெத்தை |
| சேதம் | கெடு, சிதைவு |
| சேதாரம் | வீணாதல் |
| சேதனம் | அசைவு, பிரிப்பு |

| | |
|---|---|
| சேல் டீப் | விற்பனை ஒப்பாவணம் |
| சேவகம் | ஊழியர் |
| சேவகன் | பணியாளர் |
| சேவிங்ஸ் | சேமிப்புகள் |
| சேவித்தல் | தொழுதல் |
| சேவை | தொண்டு |
| சேனாதிபதி | படைத்தலைவர் |
| சேனை | படை, தானை |
| சோசலிசம் | நிகர்மை, சமநிலை |
| சைக்காலஜி | உளவியல் |
| சைக்கிள் | மிதிவண்டி |
| சைக்கிள் ரிக்ஷா | மூவுருளி மிதிவண்டி |
| சைக்ளோஸ்டைல் | உருள்முறை அச்சு, படிபெருக்கி |
| சைத்தான் | சாத்தான் |
| சைட் | பார்வை |
| சைன்யம் | படை |
| சொந்தம் | உறவு, உரிமை |
| சொப்பனம் | கனவு |
| சொர்கம் | விண்ணுலகு |

| | |
|---|---|
| சொரூபம் | உண்மைத் தோற்றம் |
| சொற்பம் | குறை |
| சோக்கு | பகட்டு |
| சோகம் | வருத்தம் |
| சோசலிசம் | பொதுவுடைமைக் கோட்பாடு, நிகர்மைக் கொள்கை |
| சோபம் | அழகு, எழில் |
| சோபனம் | வாழ்த்து |
| சோபித்தல் | விளங்கல் |
| சோபை | ஒளி |
| சோமவாரம் | திங்கட்கிழமை |
| சோரம் | களவு, வஞ்சனை |
| சௌகரியம் | நலம் |
| சௌக்கியம் | நலம், மகிழ்ச்சி, உயர் இன்பம் |
| சௌஜன்யம் | நட்புணர்வு |
| சௌந்தர்யம் | அழகு |
| சௌபாக்கியவதி | செல்வி |

## ஞ

| | |
|---|---|
| ஞாபகம் | நினைவு |
| ஞாபகச் சின்னம் | நினைவுக் குறி, நினைவுச் சின்னம் |
| ஞாயம் | முறை, நெறி, நீதி |
| ஞான சக்தி | அறிவாற்றல் |
| ஞான சபை | அறிவுக்கழகம், சிற்றம்பலம் |
| ஞான சாஸ்திரம் | அறிவு இயல் |
| ஞான சொரூபம் | அறிவு உரு |
| ஞான சொரூபி | பேரறிவாளர் |
| ஞான திருஷ்டி | உள்ளார்ந்த நோக்கு |
| ஞான தீபம் | அறிவு ஒளி |
| ஞானம் | அறிவு, மெய்யறிவு, கல்வி |
| ஞான மார்க்கம் | அறிவு நெறி |
| ஞானாசிரியன் | அறிவுக்குரவன் |
| ஞானானந்தம் | அறிவானந்தம் |

| | |
|---|---|
| ஞானி | அறிஞன், மெய்யறிவாளன் |
| ஞானிகள் | மெய்யறிவாளர்கள் |
| ஞானேந்திரியம் | அறிவுப் பொறி |
| ஞானோபதேசம் | மெய்யறிவுறுத்தல் |

| | |
|---|---|
| ட்ரக்ஸ் | மருந்துச் சரக்கு |
| ட்ரைப்ஸ் | பழங்குடி |
| ட்ரையர் | உலர்த்தி |
| டப்பா (இந்தி) | சிமிழ் |
| டம்பம் | தற்பெருமை, பகட்டு |
| டமாரம் | பறை, கொட்டு |
| டயட் | வேளை உணவு |
| டயல் | தொலைபேசி எண் வட்டு |
| டயரி | நாட்குறிப்பு |
| டவுன் | பேரூர், நகரம் |
| டவுன் பஸ் | நகருந்து |
| டஸ்ட் | தூசி |

| | |
|---|---|
| டஸ்ட்டர் | துடைப்பான் |
| டஜன் | பன்னிரண்டு |
| டாக்டர் | மருத்துவர் |
| டாக்ஸ் | வரி |
| டாக்ஸி | அமர்த்துந்து, வாடகை உந்து |
| டாக்குமெண்ட் | ஆவணம் |
| டாப் கிளாஸ் | முதல்தரம், முதன்மையான |
| டாம்பீகம் | வீண்பெருமை |
| டார்ஜெட் | இலக்கு |
| டார்மிட்ரி | துயிலகூடம் |
| டானிக் | ஊட்டநீர் |
| டி.ஏ. (D.A.) | பரிவுப்படி, அகவிலைப்படி |
| டி.ஏ. (T.A.) | பயணப்படி |
| டிக்கெட் | சீட்டு, பயணச்சீட்டு |
| டிஃபென்ஸ் | பாதுகாப்பு |
| டிக்டேட்டர்ஷிப் | தனியாட்சி |
| டிகிரி | பாகை, பட்டம் |
| டிசால்வ் | கலைப்பு |
| டிஃபால்ட் | தவறுகள் |
| டிட்டோ | மேற்படி |

| | |
|---|---|
| டி.ட்டி.ப்பி (கணினி) | மேசைப் பதிப்பு வெளியீடு |
| டிப்ளமோ | பட்டயம் |
| டி புரோமோஷன் | பின்னேற்றம் |
| டிப்போ | கிடங்கு, பணிமனை |
| டிபார்ட்மென்ட் | துறை, திணை |
| டிஃபெக்ட் | குறை, குறைபாடு |
| டிஃபெக்டிவ் | குறைபட்ட |
| டிபேட் | சொற்போர், பட்டிமன்றம் |
| டியூப் லைட் | குழல் விளக்கு |
| டிமாண்டு | தேவை, கேட்பு |
| டிமாண்ட் டிராஃப் | கேட்புக் காசோலை |
| டிமான்ஸ்ட்ரேஷன் | செயல்முறை விளக்கம் |
| டிலே | சுணக்கம் |
| டிரக் | மருந்து |
| டிரங்கால் | நெடுந்தொலைபேசி |
| டிரண்டு | போக்கு |
| டிரஷரி | கருவூலம் |
| டிவிஷன் | (பிரிவு) கோட்டம் |
| டிரிப்ளிகேட் | முப்படி |
| டி.பி. (T.B.) | நச்சு இருமல், காசநோய் |

| | |
|---|---|
| டிராஃப்ட் | வரைவு |
| டிரேட் மார்க் | வணிகக் குறி |
| டிரேஸ் | படிவு |
| டிரெய்ன் | தொடர்வண்டி, இருப்பூர்தி |
| டிரைவர் | ஓட்டுநர் |
| டிரான்ஸ்போர்ட் | போக்குவரத்து |
| டிரிபிள் | மும்மை |
| டிரெய்னேஜ் | கழிவு நீர், வடிகால் |
| டிவிஷன் | வட்டாரம், பிரிவு, கோட்டம் |
| டிஸ்க் (கணினி) | வட்டு, மின்காந்தத் தட்டு |
| டிஸ்கவரி | புதிதறிதல், கண்டுபிடிப்பு |
| டிஸ்கிரிப்ஷன் | வண்ணனை |
| டிஸ்கவுண்ட் | தள்ளுபடி |
| டிஸ்டன்ஸ் | தொலைவு |
| டிஸ்பென்ஷரி | மருத்துவமனை மருந்தகம் |
| டிஸ்ட்ரிப்யூஷன் | பகிர்மானம், வழங்கல் |
| டிஸ்சார்ஜ் | நிறைவேற்றம், வெளியேற்றம் |
| டிஸ்பிளே | காட்சி |
| டிஸ்போசல் | முடிப்பு, அகற்றல் |
| டிஸ்ப்யூட் | தகராறு |

| | |
|---|---|
| டிஸ்மிஸ் | நீக்கு |
| டிஸிப்ளின் | ஒழுங்கு முறை |
| டிஜிட்டல் (கணினி) | எண்மம், எண்ணியல், இலக்கமுறை |
| டீ | தேநீர் |
| டீம் | குழு, ஆடு குழு, அணி |
| டீப் | ஆழ்ந்த, ஆழமான |
| டீலர் | வணிகர் |
| டியூ டேட் | உரிய நாள் |
| டுவிஸ்ட் | திரிப்பு |
| டூத்பேஸ்ட் | பற்பசை |
| டூப்ளிகேட் | நகல், நிகர்படி, இரண்டாம் படி |
| டூர் | சுற்றுலா |
| டெண்டர் | குத்தகை, ஒப்பந்தப்புள்ளி |
| டெப்ரிஸியேஷன் | தேய்மானம் |
| டெபாசிட் | கையடைப் பொருள், அடித்தொகை, வைப்புத் தொகை |
| டெஃபிசியன்சி | பற்றாக்குறை |
| டெபுடி | துணை |

| | |
|---|---|
| டெம்ப்ரரி | தற்காலிக |
| டெமாக்ரசி | மக்களாட்சி |
| டெமான்ஸ்ட்ரேட்டர் | விளக்கவுரையாளர் |
| டெய்லி | நாள்தோறும் |
| டெய்லி அலவன்ஸ் | நாள்படி |
| டெல்டா | கழிமுகம் |
| டெலக்ஸ் | தொலையச்சு |
| டெலிகிராம் | தந்திச் செய்தி |
| டெலிகிராஃப் | தந்திப் பொறி |
| டெலஸ்கோப் | தொலைநோக்காடி |
| டெலிகம்யூனிகேஷன் | தொலைத் தொடர்பு, தொலைத் தகவல் தொடர்புகள் |
| டெலிபோன் | தொலைபேசி |
| டெலிபோன் டைரக்டரி | தொலைபேசித் தொகுப்பு |
| டெலிபிரின்டர் | தொலையச்சு |
| டெலிவரி | சேர்ப்பு, ஈனுதல், பெறுதல், ஒப்படைப்பு |
| டெலிவிஷன் | தொலைக்காட்சி |
| டென்டிஸ்ட் | பல் மருத்துவர் |
| டென்ஷன் | அழுத்தம், உரை இறுக்கம் |
| டெஸ்க் | சாய்வு பலகை |

| | |
|---|---|
| டெஸ்க்ஸ்டாப் (கணினி) | மேசைப் பதிப்பு தொழில் நுட்பம் |
| டெஸ்க்ஸ்டாப் கம்ப்யூட்டர் | மேசைக் கணினி |
| டெஸ்பாட்ச் | அஞ்சல் அனுப்புகை, விடுக்கை, அடைவு |
| டெஸ்ட் | ஆய்வு |
| டேஞ்சர் | கேடு, இடர் |
| டேட்டா (கணினி) | தகவல், விவரம், செய்திக் குறிப்பு |
| டேட்டா என்ரி (கணினி) | தகவல் உள்ளீடு, தகவல் சேர்ப்பு |
| டேட்டா பேஸ் (கணினி) | தகவல் தளம் |
| டேட்டா சென்டர் (கணினி) | தகவல் மையம் |
| டே டியூட்டி | பகற்பணி |
| டேபிள் | மேசை |
| டேம் | அணைக்கட்டு |
| டேமேஜ் | ஊறுபாடு, குலைவு, பழுதடைதல் |
| டேப்லட் | குளிகை |
| டே லைட் | பகலொளி |
| டேமேஜஸ் (சட்டம்) | இழப்பீடு, தீங்கீடு |
| டோசேஜ் | மருந்தளவு |
| டை | சாயம், நிறமி |

| | |
|---|---|
| டைபாய்டு | குடற்புண் காய்ச்சல் |
| டைப்ரைட்டிங் | தட்டச்சு |
| டைமென்ஷன் | பரிமாணம் |
| டைரக்டர் | நெறியாளர், இயக்குநர் |
| டைரக்டரி | தகவல் திரட்டு |
| டைரி | நாட்குறிப்பு |
| டைவர்ஸ் | மணமுறிவு |
| டைஜெஸ்ட் | செறித்தல், செறிவு |
| டோக்கன் | குறிப்பொருள், அடையாளப் பொருள் |
| டோர்னமென்ட் | குழுவாட்டம் |
| டௌரி | சீதனம் |

## த

| | |
|---|---|
| தகனம் | எரியூட்டல் |
| தகனக் கிரியை | எரியூட்டு நிகழ்ச்சி |

| | |
|---|---|
| தகவல் | செய்தி |
| தசம் | பத்து |
| தசாங்கம் | பத்து உறுப்பு |
| தசாப்தம் | பத்தாண்டு |
| தசாவதாரம் | பத்துப் பிறப்பு |
| தசேந்திரியம் | பத்துப் பொறி |
| தசை | ஊன், சதை |
| தட்சிணம் | தெற்கு |
| தட்சிணை | காணிக்கை |
| தடாகம் | பொய்கை, குளம் |
| தண்ட நீதி | கட்டளைச் சட்டம் |
| தண்டம் | வணக்கம், கோல் |
| தண்டனை | ஒறுத்தல் |
| தண்டாயுதம் | ஒறுத்தற் கருவி |
| தணிக்கை | கட்டுப்பாடு |
| ததாஸ்து | அவ்வாறேயாகுக |
| தத்தம் | மணமகன் அளிப்பு |
| தத்து | மகவளிப்பு, மகவேற்பு |
| தத்ரூபம் | மெய்யுரு |
| தத்துவ சாஸ்திரம் | மெய்யறிவியல் |

| | |
|---|---|
| தத்துவ சாஸ்திரி | மெய்யறிவியலார் |
| தத்துவ சொரூபம் | மெய்வடிவம் |
| தத்துவஞானி | மெய்யறிவாளர் |
| தத்துவம் | மெய்ப்பொருள் |
| தந்தம் | பல் |
| தந்தி | மின்செய்தி, கம்பிச்செய்தி, இசை நரம்பு |
| தந்திரம் | சூழ்ச்சி |
| தந்திரி | சூழ்ச்சியாளன் |
| தபஸ் | தவம் |
| தபால் | அஞ்சல், முடங்கல் |
| தம்பம் (பிராகிருதம்) | தூண், கம்பம், கால் |
| தம்பதி | கணவனும் மனைவியும், இல்வாழ்தல் |
| தமாஷ் (அரபி) | கேளிக்கை, வேடிக்கை |
| தமாஷாவரி | கேளிக்கை வரி |
| தயா நிதி | அருட்செல்வம் |
| தயார் | அணியம் |
| தயாரிப்பு | உருவாக்கம் |
| தயாளம் | இரக்கம் |
| தயை, தயவு | இரக்கம் |

| | |
|---|---|
| தர்மம் | அறம் |
| தர்ம சாஸ்திரம் | அறவியல் |
| தர்ம சபை | அற மன்றம் |
| தர்ம மார்க்கம் | அறவழி, அறமுறை |
| தர்மோபதேசம் | அறமுறைத்தல் |
| தர்ம ஸ்தாபனம் | அற நிறுவனம் |
| தர்ம சங்கடம் | இயல்பு தடுமாற்றம் |
| தர்ம சிந்தை | கொடையுள்ளம் |
| தர்மிஷ்டர் | வள்ளல் |
| தர்பார் | அரசவை |
| தர்க்கம் | அளவை, வாதித்தல் |
| தர்க்க சாஸ்திரம் | அளவையியல் |
| தர்க்கவுரை | வழக்குரை |
| தர்க்கித்தல் | வழக்கிடுதல் |
| தருணம் | பொழுது, வேளை |
| தரகன் | முகவன் |
| தரணி | உலகு |
| தரப்பு | பக்கம், சார்பு |
| தரம் | தகுநிலை |
| தராசு | துலாக்கோல், நிறைகோல் |

| | |
|---|---|
| தராதரம் | ஏற்றத்தாழ்வு |
| தராதரப் பத்திரம் | தகுதிச் சான்றிதழ் |
| தரிசனம் | காட்சியளித்தல் |
| தரிசித்தல் | தொழுதல் |
| தரித்தல் | உடுத்தல், நிற்றம் |
| தஸ்தாவேஜு | ஆவணம், பதிவேடு, சான்றேடு |
| தரித்திரம் | வறுமை, மிடி |
| தருணம் | பொழுது, வேளை |
| தலம் (ஸ்தலம்) | இடம், கோயில் |
| தல யாத்திரை | கோயிற் பயணம் |
| தல விருட்சம் | கோயில் மரம் |
| தவசி | தவம் செய்பவன் |
| தவித்தல் | வருந்துதல் |
| தற்சமயம் | இப்பொழுது |
| தனபதி | செல்வந்தர் |
| தனம் | பொருள், செல்வம் |
| தனயன் | மகன் |
| தனவான் | செல்வன் |
| தனுசு | வில் |
| தஸ்தாவேஜ் (உருது) | ஆவணம் |

| | |
|---|---|
| தாக்கல் (உருது) | பதிவு |
| தாகம் | நீர்வேட்கை, விடாய் |
| தாகசாந்தி | நீர்வேட்கை போக்குதல் |
| தாசன் | அடிமை |
| தாசி | அடியாள், கணிகை |
| தாசில்தார் | வட்டாட்சியர் |
| தாட்சண்யம் | கண்ணோட்டம் |
| தாத்பரியம் | கருத்து |
| தாதா | கொடையாளர் |
| தாதி | தோழி |
| தாது | நரம்பு, கனிமம் |
| தாபம் | வெம்மை |
| தாம்பூலம் | வெற்றிலை, பாக்கு, சுண்ணம் |
| தாமதம், தாமசம் | காலந்தாழ்த்தல், பிந்துதல் |
| தாமிரம் | செம்பு |
| தார்மீகம் | கடப்பாடு, இயல்பிகம், அறநிலை |
| தாரகை | விண்மீன் |
| தாரணி | உலகு |
| தாரதம்மியம் | ஏற்றத்தாழ்வு |
| தாரம் | மனைவி |

| | |
|---|---|
| தாரை | ஒழுக்கு |
| தாவரம் | அசையாப்பொருள் |
| தாற்பரியம் | உட்பொருள், குறிப்புப் பொருள் |
| தானம் | கொடை, ஈகை |
| தானிய | கூலம் |
| தானாதிபதி | படைத்தலைவர் |
| திக்கு | திசை, பக்கம் |
| திகதி | நாள் |
| தடம் | உறுதி, வன்மை |
| திட்டாந்தம் | எடுத்துக்காட்டு |
| தியரி | கருதுகோள்; தேற்றம் |
| தியாகம் | தன்னல மறுப்பு, ஈகம் |
| தியானம் | அகவழிபாடு, உள்ளமொன்றல் |
| தியானித்தல் | அகவழிபாடு செய்தல் |
| திரணம் | புல், துரும்பு |
| திரவம் | நீர்மம் |
| திரவியம் | பொருள், செல்வம் |
| திராட்சை | கொடி முந்திரி |
| திரிகரணம் | மனம், மொழி, மெய், மூவியக்கி |
| திரிகுணம் | முப்பண்பு |
| திருஷ்டாந்தம் | மேற்கோள் |

| | |
|---|---|
| திருஷ்டி | கண்ணேறுபடுதல், பார்வை |
| திருப்தி | மனநிறைவு |
| திலகம் | பொட்டு, நெற்றிக்குறி |
| திவ்யக்ஷேத்திரம் | மேன்மைமிகு புனித இடம |
| திவ்யம் | மேன்மை |
| திவசம் | நீத்தார் நினைவு நாள் |
| தினகரன் | கதிரவன் |
| தினசரி | நாள்தோறும் |
| தினந்தோறும் | நாடோறும் |
| தினுசு (உருது) | ஒரு வகை, வகை |
| தீட்சண்யம் | கூர்மை |
| தீபஸ்தம்பம் | விளக்குத் தண்டு |
| தீபம் | ஒளி, விளக்கு |
| தீபாராதனை | ஒளி வழிபாடு |
| தீரம் | உளவலிமை, கரை, துணிவு |
| தீரன் | திறனாளி |
| தீர்க்கதரிசனம் | முக்காலக் காட்சி |
| தீர்க்கதரிசி | மெய்க்காட்சியர் |
| தீர்க்கம் | நீட்சி, கூர்மை, நீட்சி |
| தீர்க்காயுசு | நீடு வாழ்வு |
| தீர்க்காலோசனை | நீள் ஆழ்வு |

| | |
|---|---|
| தீர்க்காயுஸ் | நெடுவாழ்வு |
| தீர்த்தம் | புனித நீர் |
| தீவனம் | தீனி |
| தீவாந்திரம் | தொலைவிடம் |
| தீவிரம் | முனைப்பு, விரைவு, உறுதி |
| தீவிரவாதி | முனைப்பாளி, விரைவாளி, போராளி |
| துக்கம் | துன்பம், துயரம், வருத்தம் |
| துர்க்குணம் | தீக்குணம் |
| துதி | வாழ்த்துரை, புகழுரை, போற்றுதல் |
| துப்பட்டி | மேலாடை; போர்வை |
| துர் | தீய, கெட்ட |
| துரதிர்ஷ்டம் | தீவினைப் பயன் |
| துராசை | தீய அவா |
| துராலோசனை | தீய ஆய்வு |
| துரோகம் | வஞ்சனை, இரண்டகம் |
| துரோகி | வஞ்சகன், இரண்டகன் |
| துர்க்கதி | தீயநிலை |
| துர்க்கந்தம் | தீயவாடை |
| துர்க்கருமம் | தீச்செயல் |
| துர்ச்சகுனம் | தீக்குறி |

| | |
|---|---|
| துன்மார்க்கம் | தீயவழி |
| துன்மார்க்கர் | தீ நெறியர் |
| துர்லபம் | அடைய முடியாதது |
| துர்வாசனை | தீய நாற்றம் |
| துரிதம் | விரைவு |
| துருவம் | நிலைப்பு, முனை |
| துரூ தி ப்ராப்பர் சானல் | முறையாக, உரிய வழியாக |
| துரவம்சம் | அழித்தல், சிதைத்தல் |
| துவஜம் | கொடி |
| துவஜ ஸ்தம்பம் | கொடி மரம் |
| துவஜாரோகணம் | கொடியேற்றம் |
| துவாரம் | துளை |
| துவிபாஷ் | இரு மொழியாளர் |
| துவேஷம் | வெறுப்பு, காழ்ப்பு |
| துவைதம் | இரண்டு |
| துஷ்ட கருமம் | தீத்தொழில் |
| துஷ்ட சுபாவம் | தீய இயல்பு |
| துஷ்டன் | வம்பன், கெடுதி செய்வோன் |
| தூக்ஷணம் | வசை, இழி மொழி |
| தூதர் | சார்பாளர் |
| தூபம் | புகை |

| | |
|---|---|
| தூபி | முடி |
| தூமம் | புகை |
| தூரதிருஷ்டி | தொலைநோக்கு |
| தூரதிருஷ்டிக் கண்ணாடி | தொலைநோக்காடி |
| தூரம் | தொலைவு |
| தூர்த்தர் | தீயவர் |
| தூலதேகம் | பருவுடல் |
| தூலம் | பருமை |
| தூல சூக்குமம் | உரு அருவம் |
| தூஷணம் | பழி |
| தூஷித்தல் | பழித்தல் |
| தெய்வாதீனம் | இறையருட் செயல் |
| தெய்வீகம் | இறைத்தன்மை |
| தெரிசனம் | காட்சி |
| தேக சம்பந்தம் | உடல் தொடர்பு |
| தேகம் | உடல் |
| தேகாப்பியாசம் | உடற்பயிற்சி |
| தேகாரோக்கியம் | உடல் நலம் |
| தேஜஸ் | ஒளி |
| தேசம் | நாடு |
| தேசபக்தி | நாட்டுப்பற்று |

| | |
|---|---|
| தேசாந்திரம் | வெளிநாடு |
| தேசாந்திரி | அயல் நாட்டார் |
| தேசிய கீதம் | நாட்டுப்பண் |
| தேயு | தீ |
| தேவதை | இறைவன் |
| தேவஸ்தானம் | இறையில்லம் |
| தேவ பக்தி | இறைப்பற்று |
| தேவ பாஷை | இறைமொழி |
| தேவ பூமி | விண்ணுலகு |
| தேவன் | இறைவன் |
| தேவாலயம் | இறையில்லம் |
| தேவி | இறைவி, தலைவி |
| தேஜஸ் | ஒளி, தீ |
| தைரியம் | திட்பம், உறுதி |
| தைலம் | எண்ணெய், நெய் |
| தொனி | ஒலி |
| தோம்பு | நிலவுரிமை, ஆவணம் |
| தோரணம் | அணித் தொங்கல் |
| தோஷம் | வழு, குற்றம் |
| தோஷமில்லை | குற்றமில்லை |
| தோடா | கைகாப்பு, வளை |

# ந

| | |
|---|---|
| நகம் | உகிர் |
| நகரம் | பேரூர் |
| நகல் | படி |
| நடனம் | கூத்து, ஆடல் |
| நடுநிசி | நள்ளிரவு |
| நட்சத்திரம் | விண்மீன் |
| நஷ்டம் | இழப்பு, கேடு |
| நதி | ஆறு |
| நதி தீரம் | ஆற்றங்கரை |
| நந்தவனம் | பூங்கா, பூந்தோட்டம், பூஞ்சோலை |
| நபர் (அரபி) | ஆள் |
| நபி | இறைத் தூதர் |
| நமஸ்காரம் | வணக்கம் |
| நயம் | நேர்த்தி |
| நயனம் | கண் |

| | |
|---|---|
| நர்த்தனம் | கூத்து |
| நர்ஸ் | மருத்துவப்பணியாளர் செவிலி |
| நரகம் | கீழுலகு |
| நரர் | மக்கள் |
| நர்த்தனம் | ஆடல், கூத்து |
| நர்த்தகி | ஆடல் மகள் |
| நவக்கிரகம் | ஒன்பது கோள் |
| நவதானியம் | ஒன்பது வகை தவசம் |
| நவநீதம் | வெண்ணெய் |
| நவம் | புதுமை, ஒன்பது |
| நவமணி | ஒன்பது வகை மணிகள் |
| நவராத்திரி | ஒன்பது இரவு |
| நவீனம் | புதுமை, புதினம் |
| நற்சாட்சி | நற்சான்று |
| நற்சாட்சிப் பத்திரம் | நற்சான்றிதழ் |
| நஷ்டம் | இழப்பு |
| நாகம் | பாம்பு |
| நாசம் | அழிவு, கேடு |
| நாச காலம் | அழிவு காலம் |
| நாசி | மூக்கு |
| நாஸ்தி | இன்மை |

| | |
|---|---|
| நாஸ்திகன் | இறை மறுப்பாளன் |
| நாஸ்திகம் | இறை மறுப்புக் கொள்கை |
| நாத சொரூபம் | ஒலி வடிவம் |
| நாதம் | ஒலி, ஓசை |
| நாதி | புரவலன் |
| நாதன் | தலைவன் |
| நானாவிதம் | பல வகை |
| நாபி | உந்தி, கொப்பூழ் |
| நாபிக் கமலம் | உந்தித் தாமரை |
| நாவிதன் | பரியாரி, மயிர் வினைஞன், அம்பட்டன்; முடி திருத்தும் தொழிலாளி |
| நாமகரணம் | பெயரிடல் |
| நாமம் | பெயர் |
| நாமினல் | பெயரளவில் |
| நாயகன் | தலைவன் |
| நாயகி | தலைவி |
| நார்மல் | இயல்பான |
| நாராசம் | இருப்பாணி |
| நாஸ்தா | சிற்றுண்டி |
| நிக்கிரகம் | அழிப்பு, ஒறுப்பு |
| நிக் நேம் | செல்லப் பெயர், புனை பெயர் |

| | |
|---|---|
| நிச்சயம் | உறுதி, திண்ணம் |
| நிச்சயத்தார்த்தம் | மனவுறுதிப்பாடு |
| நிச்சயித்தல் | உறுதிப்படுத்தல் |
| நிசி | நள்ளிரவு |
| நித்தம் | அன்றாடம் |
| நிதானம் | பொறுமை, மெது |
| நித்திரை | உறக்கம் |
| நிதர்சனம் | கண்கூடான நிலை, கண்கூடு, நேர் காட்சி |
| நிதானம் | விழிப்பு |
| நிதி | செல்வம் |
| நித்தியத்துவம் | அழிவின்மை |
| நித்தியம் | அழியாமை, நிலைபேறு |
| நித்திய பூசை | நாள் வழிபாடு |
| நித்தியன் | அழிவற்றவன் |
| நித்தியானந்தம் | அழிவிலாவின்பம் |
| நிதம் | நாடோறும் |
| நித்திலம் | முத்து |
| நிந்தை | பழிப்பு |
| நிந்தனை | இகழ்ச்சி |

| | |
|---|---|
| நிபந்தனை | கட்டுப்பாடு, விதி |
| நிபுணர் | வல்லுநர் |
| நிம்மதி | உள நிறைவு, உள அமைதி |
| நிமித்தம் | பொருட்டு |
| நிமிஷம் | நொடி, மணித்துளி |
| நியதி | ஒழுங்கு; நெறிமுறை |
| நியமம் | முறை, நெறி |
| நியமனம் | அமர்த்தல் |
| நியமித்தல் | அமைத்தல் |
| நியாய சபை | முறை மன்றம் |
| நியாயம் | முறை |
| நியாயவாதி | வழக்கறிஞன் |
| நியாயஸ்தலம் | அறங்கூறவையம், நீதிமன்றம் |
| நியூசென்ஸ் | தொல்லை |
| நியூட்ரிஷன் | ஊட்டச்சத்து |
| நியூவேவ் | புதிய அலை |
| நிர்க்கதி | வழியற்ற |
| நிர்ணயம் | வரையறை, உறுதி செய்தல் |
| நிர்தாட்சண்யம் | ஒரு சார்பற்ற |
| நிர்மாணம் | உருவாக்கம் |
| நிர்மூலம் | சிதறடிப்பு |
| நிர்ப்பந்தம் | கட்டாயம், நெருக்குதல் |

| | |
|---|---|
| நிர்வாகம் | மேலாண்மை, முறைப்படி நடத்தல், ஆளுகை |
| நிர்வாணம் | வெற்றுடல் |
| நிருத்தம் | ஆடல், கூத்து |
| நிரந்தரம் | எப்பொழுதும் |
| நிரந்தரன் | இறைவன் |
| நிரபராதி | குற்றமற்றவன் |
| நிரீஸ்வரவாதி | இறை மறுப்பாளன் |
| நிருபர் | செய்தியாளர் |
| நிரூபணம் | நிலைநாட்டல் |
| நிரூபித்தல் | மெய்ப்பித்தல், எண்பித்தல், நிறுவுதல் |
| நிவர்த்தி | சரி செய்தல் |
| நிராதாரம் | பற்றுக்கோடில்லாமை |
| நிராசை | அவாவின்மை |
| நிவாரணம் | இடறுதவி, துயருதவி, துயர் தணிப்பு |
| நிவேதனம் | கொடுத்தல், படையல் |
| நிவேதித்தல் | படைத்தல் |
| நிஷ்டூரம் | கொடுமை |
| நிஷ்டை | அகநோக்கு, தவம் |
| நிஜம் | உண்மை |

| | |
|---|---|
| நீசன் | தாழ்ந்தவன் |
| நீசம் | இழிவு |
| நீதி | முறை |
| நீதி ஸ்தலம் | முறை மன்றம், நடுவர் மன்றம் |
| நீதி நூல் | முறை நூல் |
| நீதிமான் | நடுவன் |
| நூதனம் | புதுமை |
| நெக்லெக்ட் | புறக்கணிப்பு |
| நெகட்டிவ் | எதிர்மின் |
| நெட்வொர்க் | பிணையம், கட்டமைப்பு |
| நெட்வொர்க் டேட்டாபேஸ் | பிணைய தகவல் தளம் |
| நெட்வொர்க் டிரைவ் (கணினி) | பிணைய இயக்கி |
| நேசம் | உறவு |
| நேத்திரம் | கண் |
| நேவி | கப்பற்படை |
| நோட் | குறிப்பு |
| நோட்புக் | குறிப்பேடு |
| நைவேத்தியம் | படையல் |

| | |
|---|---|
| ப்ளூ | நீலம் |
| பக்குவம் | தகுநிலை, முதிர்ச்சி |
| பக்தன் | அன்பன், இறையன்பன் |
| பக்தி | அன்பு, இறையன்பு, பற்று |
| பக்தி மார்க்கம் | அன்புநெறி, இறையன்பு நெறி |
| பகிரங்கம் | வெளிப்படை |
| பகிரண்டம் | புறவுலகு |
| பகிஷ்காரம் | விலக்கு, புறக்கணிப்பு |
| பகீரதப் பிரயத்தனம் | பெரு முயற்சி, கடு முயற்சி |
| பங்கம் | குறை, பழுது |
| பங்களா | மாளிகை, வளமனை |
| பங்ச்சர் | துளை, ஓட்டை |
| பங்ச்சுவாலிட்டி | காலந்தவறாமை |

| | |
|---|---|
| பச்சாத்தாபம் | கழிவிரக்கம், இரக்கம் |
| பஞ்ச தந்திரம் | ஐவகைச் சூழ்ச்சிகள் |
| பஞ்சமாபாதகம் | ஐங்கொடுஞ் செயல்கள் |
| பஞ்சமாபாதகன் | ஐங்கொடுங் குற்றவாளி |
| பஞ்சபூதங்கள் | ஐம்பெரும் பொருட்கள் |
| பஞ்சலோகம் | ஐம்பொன் |
| பஞ்சவர் | ஐவர் |
| பஞ்சாட்சரம் | ஐந்தெழுத்து |
| பஞ்சாங்கம் | ஐந்துறுப்பு |
| பஞ்சாயம் | நடுவர் ஐவர் குழுமம் |
| பஞ்சாயத் | நடுவர் குழு, ஊராட்சி |
| பஞ்சாயம் பிரசிடென்ட் | ஊராட்சித் தலைவர் |
| பஞ்சாயத் யூனியன் | ஊராட்சி ஒன்றியம் |
| பட்சணம் | திண்பண்டம், பண்ணியம் |
| பட்சபாதம் | ஒரு சார்பு |
| பட்டாபிஷேகம் | முடிசூட்டல் |
| பட்டு வஸ்திரம் | பட்டாடை |
| பட்ஜெட் | வரவு செலவுத் திட்டம் |
| படம் | ஓவியம் |
| படுதா | திரைச்சீலை |
| ஃபண்டு | வைப்பு; நிதியம் |

| | |
|---|---|
| பண்டிகை | திருநாள் |
| பண்டிதர் | புலவர், மருத்துவர் |
| பத்தினி | கற்புடை மங்கை |
| பத்தியம் | உணவு விலக்கம், செய்யுள் |
| பத்திரம் | விழிப்பு, ஆவணம் |
| பத்திரிகை | இதழிகை, தாளிகை |
| பதம் | சொல் |
| பதவி | பொறுப்பு நிலை, தொழில் நிலை |
| பதஷ்டம் | பதைபதைப்பு, பதற்றம் |
| பதாகை | பெருங்கொடி |
| பதாதி | காலாள் |
| பதார்த்தம் | உணவுப் பொருள், சொற்பொருள் |
| பதி | இறைவன், அரசன், சொல் |
| பதி விரதம் | கற்பு |
| பதி விரதை | கற்புடையவள் |
| பதுமை | பாவை |
| பத்திரிகை | இதழ், ஏடு, செய்தித் தாள் |
| பந்த் | முற்றடைப்பு, முழு அடைப்பு |
| பந்த பாசம் | பிறவிக்கட்டு |
| பந்தம் | உறவு, தளை |
| பந்தி | வரிசை |

| | |
|---|---|
| பந்துக்கள் | உறவினர்கள் |
| பந்தோபஸ்து | காப்பு |
| பப்பயா | பப்பாளி |
| பப்ளிக் | பொதுமக்கள், பொது |
| பப்ளிக் செக்டர் | பொதுத்துறை |
| பப்ளிக் பிராசிக்யூட்டர் | அரசு வழக்குரைஞர் |
| பய பக்தி | அச்சமும் அன்பும் |
| பயங்கரம் | கொடுமை, பேரச்சம் |
| பயங்கரவாதம் | உட்கம், பேரச்ச நிலை |
| பயம் | அச்சம் |
| பயர் சர்வீஸ் | தீயணைப்புப் பணி |
| பயணம் | செலவு |
| பயாலஜி | உயிரியல் |
| பயான் | விளக்கம் |
| பயோடட்டா | வாழ்க்கைக் குறிப்பு |
| பயோடெக்னாலஜி | உயிர்த் தொழில் நுட்பவியல் |
| பர்சனல் | தனிமை, சொந்த, நேர்முக |
| பர்ட்டிகுலர் | குறிப்பிட்ட, தனிப்பட்ட |
| பர்ணசாலை | குடில் |
| பர்த்தா | கணவன் |
| பர்ப்பஸ் | நோக்கம் |

| | |
|---|---|
| பரகதி | வீடுபேறு |
| பரசமயம் | புறச் சமயம் |
| பரஞ்சோதி | பேரொளி |
| பரஞானம் | மேலறிவு |
| பரதனம் | பிறர் பொருள் |
| பரதம் | ஆடல், கூத்து |
| பரதேசம் | அயல் நாடு, வேற்று நாடு |
| பரதேசி | பிற நாட்டான், ஏதிலி |
| பரம கதி | வீடு பேறு |
| பரம கர்த்தர் | இறைவன் |
| பரம சண்டாளன் | பெருங்கொடியள் |
| பரம சத்துரு | கடும் பகைவன் |
| பரம சந்தோஷம் | பேருவகை |
| பரம சுகம் | பேரின்பம் |
| பரமண்டலம் | உயர் மண்டிலம் |
| பரமபதம் | வீடு பேறு |
| பரம ரகசியம் | அருமறைப் பொருள் |
| பரம லோகம் | மேலுலகம் |
| பரம லோபி | பெருங்கஞ்சன் |
| பரமன் | இறைவன் |
| பரமாத்மா | இறைவன் |

| | |
|---|---|
| பரமானந்தம் | பேருவகை |
| பரம் | மறுமை |
| பரம்பரை | தலைமுறை, மரபு வழி |
| பரம்பொருள் | முழு முதல் இறைவன் |
| பரலோகக் கிரியை | நீத்தார் சடங்கு |
| பரலோகம் | மேலுலகம் |
| பரவசம் | மிகு களிப்பு |
| பர ஸ்நேகம் | அயல் நட்பு |
| பரஸ்பரம் | ஒருவருக்கொருவர், ஒன்றுக்கொன்று, ஒத்திசைவு |
| பரஸ்திரி | வேறு பெண் |
| பராக்கிரமம் | மிகு வலிமை, மறம், பேராண்மை |
| பராசக்தி | இறைவி |
| பராதீனம் | பிறர் கையகம் |
| பராமறித்தல் | பேணுதல், காத்தல் |
| பராஜயம் | தோல்வி |
| பரிகரித்தல் | களைதல் |
| பரிகாசம் | ஏளனம் |
| பரிகாரம் | விடிவு, தீர்வு |
| பரிச்சயம் | அறிமுகம், பழக்கம் |
| பரிதாபம் | இரக்கம் |

| | |
|---|---|
| பரிவாரம் | ஏவலாளர் |
| பரிசாரகன் | ஏவல் செய்வோன் |
| பரிசீலனை | ஆய்தல் |
| பரிசுத்தம் | மிகு தூய்மை, மீத் தூய்மை |
| பரிசோதனை | ஆய்வு |
| பரிணமித்தல் | மாறுதலடைதல், தோன்றுதல் |
| பரிணாமம் | படி மலர்ச்சி |
| பரிணாமவாதி | படிமலர்ச்சிக் கொள்கையினர் |
| பரிதாபம் | இரக்கம், இரங்குதல் |
| பரிபாலனம் | பாதுகாத்தல், ஆளுகை, இரங்கல் |
| பரிபாஷை | குறியீட்டு மொழி, குழூஉக் குறி |
| பரிபூரணம் | நிறைவு |
| பரிமளகந்தம் | நறுமணம் |
| பரிமாணம் | அளவு |
| பரிவாரம் | சுற்றம், கிளைஞர் |
| பரியந்தம் | வரை, எல்லை |
| பரீட்சை | தேர்வு |
| பருவ காலம் | தக்க காலம் |
| பருவம் | காலம் |
| பரோபகாரம் | கைம்மாறு, கருதாயுதவி, பிறர்க்குதவி |

